

# தாய்மார்களுக்கு இந்த பாஷை நன்கு தெரியும்

ஒரு குழந்தையின் அழுகைக்கு உண்டான அர்த்தத்தை விட எந்த பாஷையிலும் அவ்வளவு அர்த்த புஷ்டியான ஒரு வார்த்தைகூட கிடையாது. ஒரு குழந்தையை குளிப்பாட்டி, ஆகாரம் கொடுத்தாலும், அந்த சமயம் ஒரு உடைமாற்றம் அவசியமில்லாமலிருந்த போதிலும், அது அழுமாயின் கஸ்ஸன்ஸ் வைட் க்ராஸ் அளிக்கும் சுகத்தையும் ஹிதத்தையும் அது விரும்புகிறது என்பதை ஒவ்வொரு புத்திசாலியான தாயும் நன்கு அறிந்து கொள்ளலாம். வியர்வை உபாதை, அரிப்பு, புண் வலி இவைகளினின்றும் குழந்தையைப் பாதுகாக்க தினசரி இரண்டு வேளையாவது தாராளமாக வைட் க்ராஸ் பேபி பவுடரை உபயோகிக்கவும்.

இங்கிலாந்தில் கஸ்ஸன்ஸினால் தயாரிக்கப்பட்ட இந்தப் பிரசித்திப் பெற்ற பவுடர் இந்தியாவெங்கும் பம்பாய் முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்டாராலும் அவர்களது பிராஞ்சுகளாலும் விநியோகிக்கப்படுகிறது.




Cussons

WHITE CROSS
BABY POWDER

Ad. No. 10.

# சுளுக்குகளுக்கு
## லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம்




சொற்ப
செலவில்
சீக்கிர
நிவாரணம்

மகத்தான
ஜோதி வாய்ந்த
சிறிய புட்டி

## விரைவில் நிச்சயமான நிவாரணம்

தயாரிப்பவர்கள் :- லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்
தபால் பெட்டி நெ. 67 :: மதராஸ்

DJK 20.

Saridon Saridon Saridon Saridon Saridon Saridon Saridon
Saridon Saridon
Saridon Saridon
Saridon Saridon
Saridon Saridon Saridon Saridon Saridon Saridon Saridon

# ஸாரிடோன்
## எல்லா வலிகளையும்
போக்குகிறது

# பேபி கமலாவின் அழகுபடுத்திக்கொள்ளும் முறை லக்ஸ் டாய்லட் சோப்...

கட்டழகி கமலாவின் அப்பழுக்கற்ற இனிதான வதனமே அவரது கவர்ச்சிக்கு முக்கிய காரணம். நீடித்து நிற்கும் சரும எழிலின் ரகசியம் தவறாமல் ஒரு அழகுபடுத்திக் கொள்ளும் முறையை கையாள்வதுதான் என்பது அவருக்குத் தெரியும். ஆகையால், சரும பாதுகாப்பில் தனி சிரத்தை யெடுத்துக் கொள்கிறார். லக்ஸ் டாய்லட் சோப்பின் தாராளமாயுண்டாகும் நறுமணங்கொண்ட நுரை அவர் சருமத்தை குளுமையாகவும், மிருதுவாகவும், சுத்தமாகவும் வைத்துக் கொள்கிறது. நீங்களும் ஏன் கமலாவைப் போல் இந்த வெண்மையான குற்றமற்ற சோப்பைக்கொண்டு உங்கள் வதன எழிலை காப்பாற்றக்கூடாது?

ஏ.வி.எம். பிரொடக்ஷன்ஸாரின் "நாம் இருவர்" என்ற புதுப் படத்தில் பேபி கமலாவை பார்க்கலாம். இந்த சமூகப் படத்தில் அவரது சிறந்த நடிப்பு அவருக்கு தனிப் பெருமையளிக்கும்.




## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களுக்கு அழகுதரும் சோப்

LTS. 162-23-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# அருமையான பற்கள்!




## உங்கள் பற்கள் வருஷக்கணக்காக வசீகரத்தன்மையுடன் இருக்குமா?

பற்கள் விலை மதிக்கமுடியாத நகைகளைப் போன்றவை. அவை உங்கள் புன்முறுவலை அழகுபடுத்தவோ, கெடுக்கவோ செய்யலாம். ஈறு உபாதிகள் பற்களுக்கு தீங்கு விளைவிக்காமல் பார்த்துக்கொள்ளுங்கள். தவறாமல் எஸ். ஆர். டூத் பேஸ்டினால் சுத்தம் செய்தால் பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியமான ஈறுகளின் உறுதியாகவும் விளங்கும்.

*பல் வைத்தியர்களால் ஈறு வியாதிகளுக்கு கையாளப்படும் ஸோடியம் ரிஸினோலியேட் என்னும் விசேஷ மருந்து சேர்ந்தது.

GIB. 28-60 TM D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND

## மயிலாப்பூர் கபாலீஸ்வரர் ஆலய கோபுர புனருத்தாரண நிதிக்காக



# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி
## உதவும் சங்கீதக் கச்சேரி

★

ஆஸ்தான வித்வான்

| | | |
|---|---|---|
| மைசூர் டி. சௌடய்யா | ... | பிடில் |
| கல்பாத்தி ராமனுதன் | ... | மிருதங்கம் |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | ... | கடம் |

ஞாயிறு 3-8-1947 மாலை 5-30 மணிக்கு
மைலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்

சென்னை பிரதம மந்திரி, ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள்
தலைமை வகிப்பார்கள்

டிக்கெட்டுகள் : ரூ. 250/: 100/: 50/: 25/: 5/: 2/:

குறிப்பு: ஏற்கனவே இந்தக் கச்சேரிக்காக வழங்கப்பட்ட டிக்கெட்டுகள் செல்லுபடியாகும்

★

எ. பார்த்தசாரதி முதலியார், சுவாமிநாத குருக்கள் : நிர்வாகிகள்.

ஒலி பெருக்கி : திருச்சி ரேடியோ ஸேல்ஸ் & ஸர்விஸ்.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 50 | 1947 ஜூலை 13 | சர்வஜித்து ஆனி 29





உலகத்தில் தற்போதுள்ள சமயங்களுக்குள்ளே ஹிந்துசமயம் புராதனமானது. "ஸநாதன தர்மம்" என்று ஹிந்து சமயத்தைச் சொல்லுவார்கள்.

உலகிலுள்ள அநேக சமூகங்களுக்குள்ளே ஹிந்து சமூகம் மிகப் பழமையானது. பதினாயிரம் வருஷத்துப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு விளங்குவது.

இவ்வளவு வயதாகி விட்ட ஹிந்து சமயத்துக்கும், ஹிந்து சமூகத்துக்கும் இனி நீடித்த வாழ்வு உண்டா என்ற கேள்வி சமீப காலத்தில் எழுந்தது. அவை மெழுகேட்டிச் சாகும் தறுவாயில் இருக்கின்றனவா அல்லது மற்றச் சமயங்களுடனும் சமூகங்களுடனும் போட்டியிட்டு நிலைத்து நிற்கக்கூடிய ஜீவசக்தி அவற்றுக்கு உண்டா என்ற பிரச்னை ஏற்பட்டது.

ஹிந்து சமயப் பெரியார்களும் ஹிந்து சமூகத் தலைவர்களும் அதற்கு ஒரு சோதனை ஏற்படுத்தினார்கள்.

"தீண்டாமை என்னும் தீமை ஒழியுமானால் ஹிந்து சமயத்துக்கும் ஹிந்து சமூகத்துக்கும் ஜீவசக்தி இருக்கிறது என்றும், அவை நிலைபெற்று வாழ்ந்திருக்கும் என்றும் முடிவு செய்யலாம்" என்றார்கள்.

"அந்தச் சோதனையின் கேந்திரஸ்தானங்கள், ஹிந்து சமயக் கோயில்களே" என்றும் சொன்னார்கள்.

சோதனையில் வெற்றி கிடைத்து விட்டது.

ஹிந்து சமயமும் ஹிந்து சமூகமும் ஜீவசக்தி உள்ளவை என்றும், அழியா வரம்பெற்றவை என்றும் ஏற்பட்டு விட்டன.

* * *




"எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிறான்" என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டது ஹிந்து தர்மம். "எவ் வுயிர்க்கும் அன்பாயிரு" என்பது ஹிந்து தர்மத்தின் தலைசிறந்த போதனை.

அந்த உண்மையையும் போதனையையும் நடைமுறையில் ஹிந்து சமூகம் கைவிட்டிருந்தது. தீண்டாமை என்னும் கொடிய சாபம் ஹிந்து சமயத்தைப் பற்றியிருந்தது.

அந்தச் சாபத்தைப் போக்கி ஹிந்து சமயத்தைப் புனருத்தாரணம் செய்ய எத்தனையோ மகான்கள் பாடுபட்டார்கள்; தவம் செய்தார்கள்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும், இராமானுஜரும், கௌரங்கரும், துளசிதாஸரும், விவேகானந்தரும், மகாத்மாவும், ராஜாஜியும் செய்த தவம் இன்று பூர்த்தியாகி விட்டது. கவிதாகூரும் பாரதியாரும் கண்ட கனவு நிறைவேறி விட்டது.

இராமேசுவரம் என்னும் மகா க்ஷேத்திரத்தில் உள்ள ஸ்ரீ ராமநாதர் ஆலயம் திறக்கப்பட்டதோடு தீண்டாமையே தொலைந்து போய்விட்டது என்று சொல்லலாம்.

புராதனமான ஸநாதன தர்மத்துக்கும் ஹிந்து சமூகத்துக்கும் "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" கூறி வாழ்த்துகிறோம்.




மலர் 6 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 50

# என்ன சேதி?

## இன்னும் குறைகிறது!

அரிசி ரேஷனைப் 10 அவுன்ஸிலிருந்து 8 அவுன்ஸாகக் குறைக்கப் போவதாகச் சென்னை சர்க்கார் அறிவித்திருப்பது இம்மாகாண வாசிகளுக்குப் பெருத்த கவலையையும் திகிலையும் விளைவிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

12 அவுன்ஸ் ரேஷனை 10 அவுன்ஸாக்கி இன்னும் சரியாக இரண்டு மாதங்கூட ஆகவில்லை. அதற்குள்ளாக இன்னும் 2 அவுன்ஸ் குறைபடுதென்றால் எல்லோருக்கும் சங்கடமாகத் தானே இருக்கும்?

சென்னை மாகாண சிவில் சப்ளைஸ் கமிஷனர் மிஸ்டர் மாண்டர்மான் சென்ற வாரம் பேசுகையில், "தற்போதைய உணவு ரேஷனை 8 அவுன்ஸாகக் குறைப்பதானால், லட்சக் கணக்கான மக்களை அரைப் பட்டினிக் குள்ளாக்குவது போலாகும். வேறு வழி எதுவும் இல்லாவிட்டால்தான், கடைசி பட்சமாகச் சர்க்கார் தற்போதைய ரேஷனைப் பத்து அவுன்ஸிலிருந்து எட்டு அவுன்ஸாகக் குறைப்பார்கள்" என்று சொன்னார். சர்க்கார் இப்போது ரேஷனைக் குறைக்க முடிவு செய்திருப்பதிலிருந்து, மிஸ்டர் மாண்டர்மான் குறிப்பிட்டது போலத் தற்போது உணவுப் பிரச்னை மிக்க மோசமான நிலைமைக்கு வந்துவிட்டது என்பதை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

இத்தகைய நிலைமை ஏற்பட்டதற்கு நாம் யார் மீது குறை கூறுவது? மத்திய சர்க்காரும் நமக்கு உதவி செய்யக் கூடிய நிலைமையில் இல்லை. வெளி நாடுகளிலிருந்தும் நாம் எதிர்பார்த்த அளவுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்கவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, சர்க்கார் எதிர்பார்த்த அளவுக்கு உள்நாட்டிலும் கொள்முதல் சரியாக ஆகவில்லை. மிராசதார்கள் மனம் வைத்துத் தங்களிடமிருக்கும் அதிகப்படி நெல்லைச் சர்க்காரிடம் ஒப்படைத்திருந்தால் இப்போது ரேஷனைக் குறைக்க வேண்டிய அவசியம் நேர்ந்திராது. சர்க்கார் அறிக்கைக்கு மேல் அறிக்கை விடுத்து அவர்களை வேண்டிக் கொண்டும் அவர்களுடைய மனம் இளகவில்லை. மக்கள் பசியால் வாடும் போது பணம் ஒன்றையே பெரிதாக நினைத்து அவர்கள் நெல்லைப் பதுக்கி வைப்பதுதான் வருந்தத்தக்க விஷயம். அத்தகையவர்களைக் கண்டுபிடித்து அவர்களுக்குத் தக்க தண்டனை கொடுக்கப் போவதாகச் சர்க்கார் அறிவித்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சமூகத்துக்கு விரோதிகளான அவர்களுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும்.

## இதுவே மேல்!

ரேஷன் ஏற்பாட்டால் நாம் ரொம்ப ரொம்ப அலுத்துப் போய் விட்டோம் என்பது உண்மையே யாகும். ஆனால், தற்போது வேறு வழி எதுவும் இல்லை. கசப்பு மாத்திரையை விழுங்கித்தான் ஆக வேண்டும். 10 - 12 அவுன்ஸ் ரேஷன் சாப்பிட்டுவிட்டு, அப்புறம் முழுப் பட்டினியாயிருப்பதைவிட இந்த அரைப் பட்டினி மேல் என்றுதான் சொல்ல வேண்டும்.

நெல் உற்பத்தியைப் பெருக்கவும், நெல் கொள்முதலை அதிகப்படுத்தவும் சர்க்கார் சென்ற வருஷம் கொடுத்தது போல இப்போதும் விவசாயிகளுக்குப் போனஸ் கொடுப்பதென்று முடிவு செய்திருக்கிறார்கள். 1947 ஜனவரியிலிருந்து ஜூன் முடியக் கொள்முதல் செய்யப்பட்ட நெல்லுக்கு மணங்கு ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் போனஸ் கொடுக்கப் போகிறார்களாம். இந்த போனஸ் பணத்தில் பாதி ரொக்கமாகவும், பாதி விவசாய உற்பத்தியைப்

பெருக்குவதற்காகக் கடலைப் புண்ணாக்கு, உரம் முதலியன மூலமாகவும் கொடுக்கப் படுமாம். இது நல்ல ஏற்பாடாகும்.

## பயப்படவேண்டாம்!

இந்தியா ருஷ்யாவுடன் ஸ்தானிக உறவு ஏற்படுத்திக் கொண்டதைப் பார்த்து திருவாங்கூர் திவான் சர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் ரொம்ப ரொம்பப் பயப்படுகிறார்.

"ருஷ்யாவுடனா? ஸ்தானிக உறவா? விஜயலக்ஷ்மி பண்டிட்டா? ஐயையோ!" என்கிறார் அவர். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "ருஷ்யாவுடன் ஸ்தானிக உறவை ஏற்படுத்திக் கொண்ட எந்த தேசம் உருப்பட்டது? இதனால் இந்திய அமைதிக்குப் பெரும் பங்கம் விளைவது நிச்சயம். ருஷ்யாவுடன் ஸ்தானிக உறவை ஏற்படுத்திக் கொண்ட நாட்டுடன் திருவாங்கூர் சமஸ்தானம் ஒரு தொடர்பும் வைத்துக் கொள்ளாது!" என்கிறார்.

சர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் எதற்காக இப்படிப் பயப்பட வேண்டுமோ தெரியவில்லை. இன்று உலகத்தில் உள்ள பிரபல வல்லரசுகள் எல்லாம் ருஷ்யாவுடன் ஸ்தானிக உறவை வைத்துக்கொண்டிருக்கின்றன. அதனால் அவைகளுக்குப் பெரிய ஆபத்து எதுவும் வந்து விடவில்லை. அவற்றின் அமைதிக்குப் பங்கம் எதுவும் ஏற்பட்டு விடவில்லை. அவைகளுக்குள் தற்போது இருந்து வரும் மனஸ்தாபத்துக்குக் காரணம் ருஷ்யாவுடன் ஸ்தானிக உறவை ஏற்படுத்திக் கொண்டதால் அல்ல; அதிகார ஆசையும் மண்ணாசையுமே காரணமாகும். இந்தியாவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே அத்தகைய மனஸ்தாபம் எதுவும் தோன்றுவதற்குக் காரணமே இல்லையென்று நன்றாகச் சொல்லலாம்.

இந்தியாவின் அமைதிக்குத் தற்போது பங்கம் ஏதாவது நேர்ந்திருக்கிறதென்றால், அது சர் ஸி. பி. போன்றவர்களால் தான். சர் ஸி. பி. திருவாங்கூருக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டு, மற்ற சமஸ்தானங்களையும் அரசியல் நிர்ணய சபையில் சேரவிடாமல் தூண்டி விட்டு, அதன் மூலம் இந்திய ஐக்கியத்துக்குப் பங்கம் விளைவிக்கும் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறார்!

இதைவிடப் பெரிய துரோகத்தையும், அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் காரியத்தையுமா ருஷ்யா செய்யப் போகிறது?

# பாரதி மண்டப நிதி

விருதுநகர், 5—7—47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

தங்கள் பத்திரிகை, தமிழ் நாட்டுக்குச் செய்து வரும் தொண்டு யாவரும் அறிந்ததே. தாங்கள் எழுதும் அரசியல் அபிப்பிராயங்களே பெரிதும் என் மனதைக் கவர்ந்தவை. நிற்க. பாரதி மண்டபம் அமைப்பதன் மூலம் தமிழர்கள் தங்கள் கடமையைச் செய்வதற்கும் பெரிதும் காரணமானீர்கள். பாரதி ஞாபகார்த்த நிதி தாங்கள் ஆரம்பித்த போது போதும் போதும் என்று சொல்லும்படி எப்படித் தமிழர்கள் அளித்தார்களோ அது போலவே இப்போது ஆரம்பித்திருக்கும் பாரதி மண்டப நிதிக்கும் அளிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. அது தமிழர்களின் கடமை. ஆவல் அதிகமும் பொருள் வசதியற்றவனுமாகிய நானும் என் சிநேகிதர்களுமாய் அனுப்பியிருக்கும் சிறு தொகை ரூபாய் 11—0—0 காணிக்கையாய் ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

பி. துரைராஜ் நாடார்,
ராஜாஜி சேவா சங்க ஸ்தாபகர்,
விருதுநகர்.

[ஆவல் அதிகமும் பொருள் வசதிக் குறைவும் உடைய தங்களைப் போன்ற அன்பர்களின் காணிக்கையைக் கொண்டே பாரதி மண்டபம் கம்பீரமாக எழுந்து வருகிறது. மிக்க வந்தனம். —ஆசிரியர்]

| | |
|---|---|
| திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யர் ரூ. | 50—0—0 |
| போஸ்டல் ஆடிட் ஆபீஸ் உத்தியோகஸ்தர்கள், சென்னை ஸ்ரீ கே. ஆர். கல்யாணராமன் அவர்கள் மூலம் ரூ. | 116—0—0 |
| ஸ்ரீ எம். ஸி. ராமலிங்கம், பாப்பாரப்பட்டி, சேலம் மூலம் ரூ. | 12—0—0 |
| சிறுவர், சிறுமிகள், கவர்ன்மெண்ட் சென்ட்ரல் ஸ்கூல், வந்தாறுமூலை, செங்கலடி, இலங்கை ஸ்ரீ மு. சிவபால் மூலம் ரூ. | 15—0—0 |
| ஸ்ரீ பி. துரைராஜ் நாடார், அ. தப. எண்ணெய் வியாபாரம், விருதுநகர் ரூ. | 11—0—0 |
| டி. வி. ஸ்ரீநிவாஸய்யர், சிப்பாஸியார், பாரி அண்டு கம்பெனி, நெல்லிக்குப்பம் ரூ. | 10—0—0 |
| அ. அரு. அண்ணாமலை—சொக்கலிங்கம் சகோதரர்கள் குருவிக்கண்டான்பட்டி, புதுக்கோட்டை | 10—0—0 |
| ராஜு—செம்பா, எழும்பூர் ரூ. | 10—0—0 |
| ஸ்ரீ கே டி. ராமன், உணவு இலாகா, ஸிவில் செக்ரடேரியேட், நாக்பூர் ரூ. | 6—5—0 |
| ஸ்ரீ பி. சுப்பிரமணிய அய்யர், கல்கி புக்டிபோ, திருநெல்வேலி | 6—0—0 |

ஆக. ரூ. 246—5—0

முன் ஜாபிதாவின்படி ரூ. 2336—12—3

ஆக மொத்தம் ரூ. 2583—1—3

# அரசியல் செப்பிடு வித்தை!









## சீன நிலைமை

புதிதாக வந்துள்ள அபரிமிதமான அமெரிக்க யுத்த தளவாடங்களின் உதவியால் சியாங் கை ஷேக் பிரமாத வெற்றி பெற்று வருகிறார்.

## விலங்குகள் போகவில்லை, விருந்துபசாரம் பலமாக இருக்கிறது!

ருஷ்ய இராணுவம்

ஐரோப்பா

அமெரிக்க இராணுவம்



# முதல் அத்தியாயம்

வானத்தை வில்லாக வளைக்கலாம்! மணலைக் கயிறாகத் திரிக்கலாம்! ஆனால், இந்த பிரிட்டிஷார் இருக்கிறார்களே, இவர்களுடைய ராஜதந்திரத்தின் போக்கை மாத்திரம் அறிந்து கொள்வது யாராலும் முடியாத காரியம்!

அவர்கள் மனம் வைத்தால் எவ்வளவு மகத்தான காரியத்தையும் கண்ணிமை கொட்டுமுன் சாதித்து விடுவார்கள். இல்லையேல், வாழைப்பழத்தில் ஊசியை ஏற்றுவது போன்று, எவருக்கும் தெரியாமலேயே எத்தனையோ வருஷங்கள் வரை இழுத்துக் கொண்டு போய் விடுவார்கள்!

ஒரே ஓர் உதாரணம் போதும்.

1935-ம் வருஷத்திய இந்திய சர்க்கார் சட்டத்தின் பூர்வாங்க விசாரணைகள் முடிய ஆறு வருஷங்களாயின. அதைத் தயாரிக்க மேற்கொண்டு இரண்டு வருஷங்களாயின.

ஆனால், இப்போதோ சில நாட்களுக்குள் விசாரணைகள், ஆலோசனைகள், ஆட்சேப சமாதானங்கள், சமரசப் பேச்சுகள், பன்முறை லண்டனுக்கும் இந்தியாவுக்கும் வாயுவேக மனோவேக யாத்திரைகள் எல்லாம் முடிந்து, ஒரு விநாடி நேரத்தில் பார்லிமெண்டிலும் வெகு துரிதமாக இந்திய சுதந்திர மசோதாவே கொண்டு வரப்பட்டு விட்டது!

• • •

இனி துளிக்கூட சந்தேகம் இல்லை!

இந்தத் தடவை பிரிட்டிஷார் தங்கள் வாக்கை நிறைவேற்றி விட்டார்கள்!

1948-ம் வருஷம் ஜூன் மாதத்துக்குள் இந்தியர்களிடம் பூரண நிர்வாகப் பொறுப்பையும் ஒப்புவித்து விடுவதாக முன்னர் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் பிரதம மந்திரி அட்லி அறிவித்த பின்னரும்கூட, பலர் பிரிட்டிஷாரின் அந்தரங்க சுத்தியைச் சந்தேகித்தனர்.

இந்தியர்களுக்குத் தற்காலிகமாக ஆசை காட்டிப் பின்னர் பிரிட்டிஷார் ஏதாவது சூழ்ச்சி செய்து விடுவார்கள் என்று எண்ணியவர்கள் பலர்.

"பிரிட்டிஷாராவது, மனதார இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுத்து விடவாவது? அது இந்தக் காலத்தில் இல்லை. ஒரு மகத்தான ரத்தக் களரி நடந்துதான் தீரவேண்டும். அவ்விதமின்றிச் சுதந்திரம் பெறுவது என்பது பகற்கனவுதான்!" என்று நினைத்தவர்களின் தொகையும் ஏராளமாகும்.

ஆனால் அவ்விதமெல்லாம் எண்ணியவர்கள் இப்போது ஏமாற்றம் அடையும்படி பிரிட்டிஷார் செய்து விட்டனர்.

மகாத்மா காந்தி கூறியது முற்றிலும் சரி என்பதை பிரிட்டிஷார் காரியத்தில் காட்டி விட்டார்கள்.

"இந்தியாவை விட்டு பிரிட்டிஷார் வெளியேறிவிட நிச்சயித்து விட்டார்கள். ஒரு நல்ல காரியத்தைச் செய்வது என்று முடிவு செய்து விட்டால், அதைச் செய்ய ஒரு வருஷம் கெடு எதற்காக? ஆகையால் அவர்கள் இன்றே வெளியேறி விடுவதுதான் சிறந்ததாகும். அவர்கள் வெளியேறினால்தான், இந்தியாவில் உருப்பட்ட முறையில் நாம் காரியங்களைச் செய்ய முடியும்" என்று சமீபத்தில் மகாத்மா காந்தி கூறினாரல்லவா?

அந்த அரிய உபதேசத்தை பிரிட்டிஷார் சிரமேற்கொண்டு காரியங்களைச் செய்ய ஆரம்பித்து விட்டார்கள் என்றே தோன்றுகிறது.

"ஒரு வருஷத்தில் அல்ல, ஆறு மாதங்களிலும் அல்ல, ஆறே வாரங்களில் வெளியேறி விடுவோம்" என்று அவர்கள் கூறிவிட்டனர்!

• • •

எனவே, அடுத்த ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி முதல் இந்தியாவின் ஆட்சி முறையில் அன்னியர் ஆதிக்கம் அறவே ஒழிந்து விடும்.

இடைக்கால தேசிய அரசாங்கம் ஆரம்பமானதிலிருந்து, அதற்கு முட்டுக்கட்டைகளாக இருந்துவந்த ஐரோப்பிய ஐ. ஸி. எஸ். கோஷ்டி, ஐரோப்பிய கவர்னர்கள் கோஷ்டி, வகுப்புவாதிகள் கோஷ்டி, ரெஸிடெண்டுகள் கோஷ்டி முதலிய பல்வேறு கோஷ்டிகளும் ஆகஸ்டு

மாதம் 15-ந் தேதியோடு இருந்தவிடம் தெரியாமல் ஓடிவிடப் போகின்றன.

பிரிட்டிஷ் மன்னருக்கு இருந்து வரும் "இந்தியாவின் சக்கரவர்த்தி" என்ற பட்டம் அன்றைய தினத்தி லிருந்து ரத்தாகி விடும்.

இனி இந்தியா விஷயமாக பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு எவ்வித அதிகாரமும் இல்லை.

அதாவது, ஆகஸ்டு மாதம் 15-ந் தேதிக்குப் பின் இந்தியாவின் நிர்வாகத்தில் இந்தியர் அல்லாத ஒருவருக்கு எவ்வித அதிகாரமும் இருக்கப் போவதில்லை.

சென்ற 4-ந் தேதி பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கொண்டு வரப்பட்டுள்ள இந்திய சுதந்திர மசோதாவின் கருத்து அதுதான்.

பிரிட்டன் விஷயமாக பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கும், அமெரிக்கா விஷயமாக அமெரிக்க காங்கிரசுக்கும் எவ்வளவு அதிகாரம் உண்டோ, அதைப் போல் இந்தியா விஷயமாக இந்தியா சட்டசபைக்குப் பூரண அதிகாரம் உண்டு என்பதை அந்த மசோதா அங்கீகரிக்கின்றது.

இந்தியாவும் பாக்கிஸ்தானும் இரண்டு டொமினியன்களாக இருக்க வேண்டும் என்பது மசோதாவின் நோக்கமாகும்.

எனினும், ஆகஸ்டு 15-ந் தேதிக்குப் பின் கவர்னர் ஜெனரல் பதவியை ரத்துச் செய்து விடவும், குடியரசுப் பிரகடனம் செய்யவும் கூட இந்தியா சட்டசபைக்கு அதிகாரம் உண்டு.

அதாவது, பிரிட்டிஷாருக்கு பிரிட்டனில் எத்தனை உரிமைகள் உண்டோ, அமெரிக்கருக்கு அமெரிக்காவில் எத்தனை உரிமைகள் உண்டோ, அத்தனை உரிமைகளும் இந்தியாவில் இனி இந்தியருக்கு உண்டு.

இத்தகைய பூரண சுதந்திரம் பெறுவதற்கே சென்ற அரை நூற்றாண்டாக நமது மாபெரும் தலைவர்கள் போராடி வந்தார்கள்.

அவர்களுடைய போராட்டம் வெற்றி பெற்று, நாம் இழந்த பிறப்புரிமைகளை மீண்டும் பூரணமாக அடைந்திருக்கிறோம்.

• • •

எனினும், அந்த மசோதாவில் பல விபரீதமான அம்சங்கள் அடங்கியிருக்கின்றன என்பது உண்மையே. அவற்றின் விளைவாக இந்தியாவில் நிரந் தொல்லைகளும் குழப்பங்களும் ஏற்படும் என்பதும் உண்மையே.

அதனால்தான், இந்திய சுதந்திர மசோதாவைக் கண்டு குதூகலம் அடைய வேண்டிய இந்தியர்கள், இந்தியா பிளவு பட்டிருப்பதையும் இதர விபரீதங்களையும் கண்டு சோகமுற்றிருக்கிறார்கள்.

தேச மக்களின் சோகத்தையே மகாத்மா காந்தி கீழ்க்கண்ட வார்த்தைகளின் மூலம் பிரதிபலித்திருக்கிறார் :

"இந்தியாவை, சமாதானமும் அமைதியும் நிலவும்படி விட்டுவிட்டுச் செல்ல வேண்டும் என்பதே தங்கள் நோக்கம் என்று பிரிட்டிஷார் பறைசாற்றியிருக்கிறார்கள். ஆனால் இந்திய இராணுவத்தை அவர்கள் பிரிக்க முற்பட்டிருப்பதும், சமஸ்தானங்களைப் பற்றிய அதிருப்திகரமான நிலைமையும் இந்தியாவைக் குழப்பத்தில் ஆழ்த்தி விடும்.

"பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுச் செல்லு முன், இரண்டு விஷயங்களை ஒழுங்கு செய்து விட்டுப் போக வேண்டும்.

"அதாவது, இந்திய இராணுவமும் பாக்கிஸ்தான் இராணுவமும் மோதிக் கொள்ளும்படி நேராதவாறு இராணுவப் பிரச்னையைத் தீர்த்து வைக்க வேண்டும். அடுத்தபடியாக, சமஸ்தானங்கள் ஏதாவதொரு அரசியல் நிர்ணய சபையில் கலந்து கொள்ளும் படி பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால்தான், விஷமிகள் என்ற அபவாதத்துக்கு பிரிட்டிஷார் ஆளாகாமல் இருக்க முடியும்."

இவ்வாறாக, மகாத்மா காந்தி மேற்படி மசோதாவிலுள்ள விபரீதமான விஷயங்களைச் சீர்படுத்தும்படி பிரிட்டிஷாரைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

• • •

எவ்விஷயத்திலும் பிரிட்டிஷாரின் வாதம் காரிய வாதமாக இருக்கிறதேயன்றி, நியாய வாதமாக இல்லை.

அவர்கள் கையாளும் ஒவ்வொரு முறையிலும் அவர்களுடைய விஷமத்தனம் நிருபணமாகின்றது.

பெரும்பான்மையான முஸ்லிம்களின் கோரிக்கைக்கு இணங்க பாக்கிஸ்தான் அளிக்க வேண்டியது அவசியம் என்றார்கள்.

ஆனால், அதே கொள்கையை மற்ற விஷயங்களை ஒட்டியும் கடைப் பிடித்தால் ஆட்சேபணைக்கே இடமிராது.

அவர்களின் கொள்கை ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு விதமாக இருக்கிறது.

சில இடங்களில் மாத்திரம் சட்ட சபைகளிலுள்ள ஜனப்பிரதிநிதிகளின் முடிவே சரி என்றார்கள்.

ஆனால், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலோ சட்ட சபையிலுள்ள ஜனப்பிரதிநிதிகளை அவர்கள் லட்சியம் செய்யாமல், அந்த மாகாணப் பிரச்னையை ஜனங்களின் வோட்டுக்கு விட்டிருக்கிறார்கள்.

அதே சமயம், சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்ட வரையில், பிரிட்டிஷார் பெரும்பாலான சமஸ்தான அதிபர்களின் அபிப்பிராயப்படியும் செய்யவில்லை; பெரும்பான்மையான சமஸ்தானப் பிரஜைகளின் அபிப்பிராயப்படியும் செய்யவில்லை.

எல்லைப்புற மாகாணத்தைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்க ஆப்கானிஸ்தானத்துக்கு உரிமையில்லை என்று சொல்லுகிறார்கள். அது முற்றிலும் சரியே.

ஆனால், அதைப் போலவே பிராரைக் கொடு என்று கேட்க நிஜாமுக்கும் உரிமையில்லை என்பது பிரிட்டிஷாரின் மனதில் படவில்லை.

எல்லைப்புற மாகாணத்தின் விதியை நிர்ணயிக்கப் பொதுஜன வோட்டு எடுப்பதுதான் நியாயம் என்று முடிவுசெய்துள்ள பிரிட்டிஷார், சுமார் அரைக் கோடி ஜனங்களுள்ள பிராரிலும் அதே முறையை ஏன் கைக்கொள்ளக் கூடாது?

சமஸ்தானங்கள் தங்களுக்குத் தனி ராஜ்யம் வேண்டும் என்று எந்தக் காலத்திலும் கூறியதில்லை; அதற்காகப் போராடியதும் இல்லை.

இந்தியாவில் சுதந்திரப் போராட்டம் நடந்தது போன்று, சமஸ்தானங்களிலும் சுதந்திரப் போராட்டம் நடந்துதான் வந்திருக்கிறது.

அப்படியிருக்க, இந்திய மக்களுக்குச் சுதந்திரம் அளித்துள்ள பிரிட்டிஷார், இந்திய சமஸ்தானப் பிரஜைகளுக்குச் சுதந்திரம் அளிக்க மறுத்து அவர்களை எதேச்சாதிகாரிகளின் கையிலும் வகுப்புவாதிகளின் கையிலும் ஒப்புவிக்க முற்படுவது உலகமே ஒப்புக்கொள்ள முடியாத விஷயம் ஆகும்.

* * *

1858-ம் வருஷம், அதாவது இந்தியாவில் நிகழ்ந்த மகத்தான முதலாவது சுதந்திர யுத்தத்துக்குப் பின், விக்டோரியா மகாராணி விடுத்த பிரகடனம் ஒன்றில் பிரிட்டனின் நோக்கத்தைப் பற்றிக் கீழ்வருமாறு கூறினார்:—

"இந்தியாவின் சுபிட்சமே பிரிட்டனின் பலம்; இந்தியர்களின் சமாதானமே பிரிட்டனின் பாதுகாப்பு; இந்தியர்களின் நன்றிக்கு நாம் பாத்திரராக இருப்பதே உலகில் நமக்குக் கிடைக்கும் சிறந்த வெகுமதியாகும்."

இவ்வாறு விக்டோரியா மகாராணி பறைசாற்றிச் சற்றேறக் குறைய நூறு வருஷங்கள் ஆகின்றன.

ஆனால், அவ்வார்த்தைகள் இன்றளவும் ஏட்டுச் சுரைக்காயாகவே இருந்து வந்திருக்கின்றன.

சுபிட்சம் என்றால் என்ன என்பதே இந்தியர்களுக்குத் தெரியாது! இந்தியாவில் பிரிட்டிஷார் காலடி வைத்தது முதல் இந்தியர்களிடை சமாதான வாழ்வே செத்து விட்டது. இந்தியர்களின் நன்றிக்கு பிரிட்டிஷார் எக்காலத்திலும் பாத்திரர் ஆனதில்லை.

"எது எப்படியாயினும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் இறுதிப் படலம் சில மாதங்களில் முடியப் போவது மாத்திரம் நிச்சயம்" என்று நாம் சென்ற ஜூன் மாதம் 8-ந் தேதி இதழில் குறிப்பிட்டிருந்தோம்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் படலம் அறவே முடிந்து விட்டது.

இந்தியாவில் பரிபூரண சுதந்திர ஆட்சியின் முதல் அத்தியாயம் ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி ஆரம்பமாகின்றது.

* * *

இந்திய சுதந்திர மசோதாவை பிரிட்டிஷார் பார்லிமெண்டில் கொண்டு வந்திருப்பது உலகமே புகழக்கூடிய மகத்தான ஒரு செய்கை என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. எனினும், மகாத்மா காந்தி கூறியிருப்பதுபோல், இந்தியாவில் குழப்பத்தை உண்டாக்கும் மசோதா இடம் கொடுக்குமாயின், உலகத்தின் பாராட்டுதலுக்குப் பாத்திரமாக வேண்டிய பிரிட்டன், உலகத்தின் வெறுப்புக்கும் கண்டனத்துக்கும் ஆளாவது நிச்சயம்.

பிறகு, காலதேவதையின் நிர்ப்பந்தத்தினால் வேறு வழியின்றி பிரிட்டன் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்ததேயன்றி, அந்தரங்க சுத்தியுடன் அளிக்கவில்லை என்றே எதிர்கால சரித்திராசிரியர்கள் ஏசுவார்கள்.



★

சென்ற ஜூலை மாதம் 29-ந் தேதி திருச்செங்கோடு அர்த்தநாரீசுவரர் ஆலயம் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டது. காந்தி ஆசிரம ஸ்ரீ ராமதுரை சகல பொறுப்புக்களையும் மேற்கொண்டு தொண்டு செய்தார்.

★

★

பூரண கும்ப மரியாதைகளுடன் சபாநாயகர், டாக்டர் சுப்பராயன், ஸர்தார் வேதரத்தினம் மற்றும் பல ஊர் ஜன பக்தர்கள் அர்த்தநாரீசுவரரையும் — திருச்செங்கோடு வேலவரையும் மனம் குளிரக் கண் குளிரத் தரிசனம் செய்தனர்.

★

# கடைசியாக, ஒரு வார்த்தை!

சின்ன அண்ணாமலை

"இராமேசுவரத்திலும் ஆலயப் பிரவேசம் நடக்கிறதாமே? அதற்கு நமது பிரதம மந்திரியும் சபாநாயகரும் விஜயம் செய்கிறார்களாமே?" என்று கல்கி ஆசிரியர் சொல்லிக்கொண்டே, கையில் வைத்திருந்த அச்சிட்ட அழைப்புக் கடிதத்தைக் காட்டினார்.

"ஆமாம்; ஆமாம். அந்த வைபவத்துக்குக் கல்கி ஆசிரியரும் சின்ன அண்ணாமலையும் கூட விஜயம் செய்கிறார்களாம்!" என்றேன் நான்.

"அது எங்கே போட்டிருக்கிறது? என் கண்ணில் படவில்லையே?" என்றார் கல்கி.

"உங்கள் கையில் உள்ள அழைப்புக் கடிதத்திலே தான் போட்டிருக்கிறது. 'பிரதம மந்திரி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை, மற்றும் அறிஞர்களும் தேசபக்தர்களும் விஜயம் செய்வார்கள்' என்று அச்சிட்டிருக்கிறதல்லவா? 'அறிஞர்கள்-தேசபக்தர்கள்' என்னும்போது நம்மையும் சேர்த்துத் தானே சொல்லியிருக்க வேண்டும்?" என்றேன்.

* * *

இராமேசுவரம் என்பது சாதாரண க்ஷேத்திரம் அல்ல. அதற்கு எத்தனையோ மகிமைகள் உண்டு. இந்தியா ஒரே தேசம் என்பதற்குச் சாட்சியாக விளங்கும் க்ஷேத்திரம் இராமேசுவரம். தமிழ் நாட்டின் எல்லையை நாம் குறிப்பிடும்போது 'வட வேங்கடம் முதல் தென் குமரி வரையில்' என்று சொல்லுகிறோமல்லவா? அது போலவே, வடக்கத்தியார் இந்தியாவின் எல்லையைக் குறிப்பிடும்போது 'இமயம் முதல் சேது வரையில்' என்றும், 'காஷ்மீரத்திலிருந்து இராமேசுவரம் வரையில்' என்றும் சொல்லுவார்களாம். தென்னாட்டையும் வடநாட்டையும் இணைப்பதற்கு இராமேசுவரம் ஒரு 'சேது'வாக விளங்குகிறது. வருஷந்தோறும் ஆயிரக் கணக்கான வட இந்தியர்கள் கங்கையில் முழுகிக் காசி விசுவநாதரைத் தரிசனம் செய்துவிட்டு நேரே இராமேசுவரத்துக்கு வருகிறார்கள். வரும்போது ஒரு சின்னச் செம்பில் கங்கை நீர் கொண்டுவந்து இராமேசுவரத்து சுவாமிக்கு அபிஷேகம் செய்விக்கிறார்கள். வடக்கே பெண்கள் 'இராமேசுவரி' என்றும் ஆண்கள் 'இராமநாத்' என்றும் பெயர் வைத்துக் கொள்கிறார்கள். தென்னிந்தியாவில் பெண்மணிகள் 'விசாலாட்சி' என்றும், ஆண் மணிகள் 'விசுவநாதன்' என்றும் பெயர் சூட்டிக் கொள்கிறார்கள்.

இராமேசுவரத்துக் கோவிலில் உள்ள சுவாமிக்கு இராமநாதர் என்று பெயர். இராமர் சேதுவில் அணை கட்டுவதற்கு முன்னால் பிரதிஷ்டை பண்ணிப் பூஜை செய்த சுவாமியானபடியால், இராமநாதர் என்று பெயர் ஏற்பட்டது.

* * *

இவ்வளவு மகிமை பொருந்திய இராமேசுவர ஆலயத் திறப்பு வைபவத்துக்கு கனம் பிரதம மந்திரியும் கனம் சபாநாயகரும் வரும்போது இன்னும் பல கனத் தங்கியவர்களும் வருவது இயல்பேயல்லவா? இதைப்பற்றி நான் விசாரித்தபோது என் சந்தேகம் உறுதிப்பட்டது. கனம் மந்திரி கூர்மையா அவர்கள், மாஜி மந்திரி ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை அவர்கள், இன்னும் பல சட்டசபை அங்கத்தினர் எல்லாரும் வருகிறார்கள் என்று தெரிந்தது. இராமேசுவரத்துக்கு அருகில் போகும்போது, ரயில் கொஞ்ச தூரம் சமுத்திரத்தில் போட்ட பாலத்தின் மேல் போகவேண்டும் என்பதையும் நான் அறிந்திருந்தேன். கனம் தங்கியவர்கள் ரொம்பப் பேர் ஒரே ரயிலில் ஏறிவிட்டால், ரயில் தாங்கியபோதிலும் பாலம் தாங்கவேண்டுமல்லவா? எனவே, நாங்களும் அதே ரயிலில் ஏறிக் கனத்தை அதிகப்படுத்த வேண்டாம் என்று எண்ணி, 30உ காலையில் இராமேசுவரம் போய்ச் சேரும் ரயிலிலேயே ஏறிச் சென்றோம்.

* * *

இராமேசுவரம் ஒரு தீவு. அந்தத் தீவுக்கு ரயில் பாலத்தைத்தவிர வேறு பாலம் கிடையாது. எனவே இராமேசுவரத்தில் மோட்டார்கார், போபத்கார், அம்பேத்கார், — ஒன்றுமே இல்லை! இரட்டை மாட்டுப் பெட்டிவண்டியில் ஏறி

தேவஸ்தானக் கமிட்டியார் ஏற்படுத்தியிருந்த ஜாகைக்குப் போய்ச் சேர்ந்தோம்.

அங்கே ஸ்ரீ ஏ.எல். ஏ. ஆர். சோமநாதஞ் செட்டியார் அவர்கள் எங்களைப் பார்த்ததும் தலையை அசைத்து நல்வரவு கூறினார்கள். இராமேசுவரம் இராமநாத சுவாமி கோயிலைத் திறக்கும் விஷயத்தில் முதன்மையாக நின்று விழாவை நடத்தி வைத்தவர் தேவகோட்டை ஜமீன்தார் ஸ்ரீ சோமநாதஞ் செட்டியார் அவர்கள்தான். எனவே, அன்றைய வைபவம் சரிவர முடிய வேண்டுமென்ற கவலை அவருடைய முகத்தோற்றத்தில் நன்கு தெரிந்தது.

ஸ்ரீ சோமையா அவர்கள் இராமேசுவரத்தின் மகிமையைப் பற்றிச் சில சுவையான விவரங்களைச் சொன்னார்கள். ஒரு சமயம் ஸ்ரீ சோமையா குவாலியரில் நடந்த ரயில்வே மகாநாட்டுக்குச் செல்லவேண்டியிருந்ததாம். வழியில் பரோடாவில் தங்கினார்கள். பரோடா திவான் ஸ்ரீ வி. டி. கிருஷ்ணமாச்சாரியார் குவாலியர் மகாராஜாவுக்கு, "இராமேசுவரம் கோவில் டிரஸ்டி ஸ்ரீ சோமநாதஞ் செட்டியார் வருகிறார்" என்று முன்னதாக எழுதினாராம். ஸ்ரீ சோமையாவும் அவருடைய சிநேகிதரும் குவாலியர் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கியபோது, அலங்கரித்த யானைகள், குதிரைகள், பூரண கும்பங்கள், கோஷ வாத்தியங்கள் முதலிய பிரமாத ஏற்பாடுகளுடன் வரவேற்பு நடந்ததாம். அவர்கள் இறங்கிய ஜாகையில், கங்கையிலிருந்து கொண்டு வரப்பட்டிருந்த தீர்த்தமும், ஒரு பெரிய அறை நிறையப் பூஜை செய்வதற்கு வேண்டிய சாமக்கிரியைகளும் தயாராக வைத்திருந்தார்களாம்! இராமேசுவரம் கோவில் டிரஸ்டி என்றால், சங்கராச்சாரியரைப் போன்ற ஆச்சாரிய புருஷரா யிருக்க வேண்டுமென்று எண்ணி இவ்வளவு ஏற்பாடும் செய்திருந்தார்களாம். ஸ்ரீ சோமையா அவர்களும் இராமேசுவரத்தின் பெருமையை நிலைநாட்டும் பொருட்டு பூஜை அறைக்குள் சென்று "இராமநாதா" "இராமநாதா" என்று சிறிது நேரம் ஜபம் செய்துவிட்டுப் பூஜையை முடித்துவிட்டவராக வெளியில் வந்தாராம்! குவாலியர் மகாராஜா இராமேசுவரம் டிரஸ்டியிடம் ரொம்பவும் மரியாதையாக நடந்து கொண்டாராம். ஸ்ரீ சோமையாவுடன் இருந்த நண்பர் சந்தர்ப்பத்தை அறிந்து மடியில் வைத்திருந்த விபூதிப் பையை எடுத்து, "இராமேசுவரப் பிரசாதம்" என்று கொடுத்ததும் மகாராஜா பூரித்துப்போய்ப் பயபக்தியுடன் வாங்கி நெற்றியில் இட்டுக் கொண்டாராம்! அப்போதுதான் ஸ்ரீ சோமையா அவர்களுக்கு இராமேசுவரத்தின் மகிமை நன்றாய்த் தெரிந்ததாம்.

* * *

அவ்வளவு மகிமை வாய்ந்த இராமேசுவர ஆலயத்தில் பிரவேசிப்பதற்கு, சாயங்காலம் பிரதம மந்திரி-சபாநாயகர் கோஷ்டி வருகிற வரையில் நாங்கள் காத்திருக்கவில்லை. பிற்பகல் இரண்டு மணிக்கே ஆலயத்துக்குள் பிரவேசித்து விட்டோம். "ஆலயம் என்றால் இதுவல்லவோ ஆலயம் என்று நினைக்கும்படி எடுத்த எடுப்பிலேயே கோயில் வேலைப்பாடுகள் எங்கள் மனதைக் கவர்ந்துவிட்டன. கோயில் பிராகாரம் இருக்கிறது, பாருங்கள்! அதை உலகத்திலே இல்லாத அதிசயம் என்று சொல்லலாம். அம்மம்மா! எவ்வளவு நீளம்? எவ்வளவு விசாலம்! தூண்களிலேதான் என்ன அற்புதமான சிற்ப வேலைகள்! ஒரு கோடியில் நின்று பார்த்தால் மற்றொரு கோடியைப் பார்ப்பதற்கே தூரதிருஷ்டிக் கண்ணாடி வேண்டும் போலிருந்தது! பிராகாரத்தை ஒட்டிக் 'காரிடார்' வேறு நிர்மாணித்திருக்கிறார்கள். பிராகாரத்தின் சுற்றளவு சுமார் ஒரு மைல் இருக்கலாம்.

முப்பத்திரண்டு தீர்த்தங்கள் அதாவது கிணறுகள் கோவிலுக்குள்ளே இருப்பதாக அறிந்து கொண்டோம். ஒவ்வொரு தீர்த்தமும் ஒவ்வொரு கதையுடனிருக்கிறது.

ஒரு தீர்த்தக் கிணற்றுக்குச் சமீபம் வந்தவுடன் எங்களை அழைத்துக் கொண்டு வந்தவர் "இந்த சர்வதீர்த்த தீர்த்தத்தினால் மற்ற எல்லாத் தீர்த்தங்களின் புண்ணியமும் கிடைக்கும்" என்று சொன்னார். "அப்படியானால் ரொம்ப சௌகரியமாகப் போச்சு!" என்று சொல்லி, நானும் கல்கி ஆசிரியரும் மேற்படி தீர்த்தத்தை இரண்டு மூன்று கை வாங்கி அருந்தினோம். கடற்கரை ஓரத்திலிருக்கும் மேற்படி தீர்த்தம் கொஞ்சங்கூட உப்புக் கரிக்காமல் நல்ல இளநீர்போல் ருசியாக இருந்தது. பின்னர் ராமநாத சுவாமி தரிசனம் செய்யலாமென்று போனோம். கூட வந்தவர், மூலஸ்தானத்தைக் காட்டி, "இதுதான் இராமர் பிரதிஷ்டை செய்த லிங்கம்; ஆனால் முதலில் இந்த சந்நிதியைத் தரிசனம் செய்வது வழக்கமில்லை. அனுமார் பிரதிஷ்டை செய்த லிங்கம் பக்கத்தில் இருக்கிறது; அதைத்தான் முதலில் தரிசனம் செய்ய வேண்டும்" என்று சொன்னார். "அதென்ன? அனுமார் எதற்காக லிங்கப்

பிரதிஷ்டை செய்தார்? அனுமார் இராம பக்தர் ஆயிற்றே?'' என்று கேட்டேன். அதன் பேரில் அந்த வரலாற்றையும் தெரிந்து கொண்டோம்.

இராமர் சிவ பூஜை செய்வதற்காகப் பக்கத்தில் எங்கேயாவது சிவலிங்கம் இருக்கிறதா என்று அனுமாரைப் பார்த்து வரச் சொன்னாராம். உடனே அனுமார் ஒரு சிவலிங்கத்தைத் தேடிப் பிடித்தாராம். அதை இராமரிடம் கொண்டு போவதற்காக அசைத்துப் பிடுங்க முயற்சித்தாராம். எவ்வளவோ முயன்றும் முடியவில்லையாம். நம்ம அண்ணாச்சிக்குக் கோபம் வந்து விட்டதாம்! உடனே, வால் துடித்ததாம்! வாலினால் லிங்கத்தை இறுகப் பிடித்து முழு பலத்துடன் அண்ணாச்சி இழுத்தபோது, திடீரென்று என்ன நடந்தது தெரியுமா? வால் அறுந்துபோய் விட்டதாம்! அந்தோ! அனுமார் என்ன செய்வார்! அந்த வால்தானே அவருக்கு அழகு கொடுத்துக் கொண்டிருந்தது? வாலில் அறுந்த இடத்திலிருந்து குருதி பெருகிற்றாம். (குருதி என்றால் இரத்தம் என்று அர்த்தம். இப்படி எல்லாம் சில வார்த்தைகளைப் போட்டு வைத்தால்தான் எனக்கும் தமிழ் எழுதத் தெரியும் என்று பண்டிதர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள்.)

குருதி பெருகி மணலிலே ஓடியதாம். அதனால்தான் இன்றுகூட அந்த இடமெல்லாம் சிவப்பு மணலாகவே இருக்கிறதாம்!

"பிறகு, எங்க அண்ணாச்சி என்ன ஆனாரு?'' என்று கேட்டேன்.

"கர்வம் அடங்கிச் சிவனைத் தொழுது அருள் பெற்று லிங்கத்தை எடுத்துக் கொண்டு வந்தார். ஆனால் அதற்குள் இராமர், நேரமாகி விட்டது என்று, வேறு ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து பூஜை செய்ய ஆரம்பித்து விட்டார். அனுமார் அண்ணாச்சிக்கு வருத்தம் அதிகமாகி விட்டது! இராம பிரானிடம் ஒரு வரம் கேட்டு வாங்கிக் கொண்டார். அதாவது முதலில் அவர் கொண்டு வந்த லிங்கத்திற்குப் பூஜை செய்ய வேண்டுமென்றும் பிறகுதான் ஸ்ரீ இராமருடைய லிங்கத்துக்குப் பூஜை செய்ய வேண்டுமென்றும் வரம் பெற்றார்!''

கோவிலுக்குள்ளே இன்னும் எத்தனையோ லிங்கங்கள் இருக்கின்றன. 'லவண லிங்கேச்வரர்' என்னும் லிங்கம் உப்பாலே செய்யப்பட்டதாம். ஆனால் தண்ணீர்விட்டு அபிஷேகம் செய்தால்கூட அது கரையாதாம். ஜோதி லிங்கமென்று மற்றொரு லிங்கம் இருக்கிறது. இது தீபாராதனை காண்பிக்கும் போது பளபள வென்று மின்னுகிறது. இந்த அதிசயத்தை எல்லாம் பார்த்து விட்டுப் பர்வதவர்த்தினி அம்மன் சந்நிதிக்குச் சென்றோம். அம்மன் சந்நிதிக்கு முன்னால் ஒரு மேடை இருக்கிறது. அதில் பிசாசு பிடித்தவர்களைக் கொண்டு போய் உட்கார வைத்தால் பிசாசு ஒரு ஆட்டம் போட்டுவிட்டு ஓடியே போய்விடுமாம். நாங்கள் போனபோது அந்த மேடையில் ஒரே ஒரு பிசாசு தனிமையாக உட்கார்ந்து ஆடிக் கொண்டும் "போகிறேன்; இதோ போகிறேன்!'' என்று கதறிக்கொண்டும் இருந்தது. அது தீண்டாமை என்னும் பிசாசுதான். "போய்விடு! ஐந்து மணி அடிப்பதற்குள்ளே போய்விடு! ஓடிப்போய்ச் சமுத்திரத்திலேயே விழுந்துவிடு!'' என்று தீண்டாமைப் பிசாசைப் பார்த்துச்சொல்லி விட்டு, அப்பால் உள்ள அம்மனின் மந்திரிணி மண்டலத்தைப் பார்வையிட்டோம். ஒவ்வொரு அணுக்கும் ஒரு மந்திரிணி வீதம் நிற்க வைத்திருக்கிறார்கள். நீதி மந்திரிணி லக்ஷ்மிதேவி, யுத்த மந்திரிணி பத்திரகாளி,—இப்படியாகப் பல மந்திரிணிகள் புடைசூழ வீற்றிருந்த அம்மனைத் தரிசித்துவிட்டு ஊரைச் சுற்றிப் பார்ப்பதற்குப் புறப்பட்டோம். எத்தனையோ ஆயிரக் கணக்கான யாத்ரீகர்கள் வரும் இராமேசுவரம் கோவில் மிகவும் சுத்தமாக வைக்கப்பட்டிருப்பது குறித்துக் கல்கி ஆசிரியர் மிகவும் மகிழ்ச்சி யடைந்தார். சமீபத்தில் நாங்கள் தரிசித்த கோவில்கள் எல்லாம் இவ்வளவு சுத்தமாக இருந்தன என்று சொல்ல முடியாது. எனவே, கோவில் சுத்தமாக வைக்கப்பட் டிருப்பதற்காகவே ஆச்சரியப்பட வேண்டி யிருந்தது. ஆனால், இவ்வளவு பெரிய பிரம்மாண்டமான கோவில்களை அந்தக் காலத்தில் கட்டி முடித்தவர்களைப் பற்றி என்னவென்று சொல்வது? எப்படி ஆச்சரியப்படுவது? இராமேசுவரத் தீவில் பாறை, குன்று ஒன்றும் கிடையாது. வெகு தூரத்திலிருந்து படகுகளிலேதான் கருங்கல்லைக் கொண்டு வந்திருக்க வேண்டும். அப்படிக் கொண்டுவந்து இவ்வளவு அற்புதமான சிற்ப வேலைகளுடன் இந்தக் கோவிலைக் கட்ட எத்தனை காலம் எத்தனை மனிதர்கள் எவ்வளவு பக்தி சிரத்தையுடன் வேலை செய்திருக்க வேண்டும்?

மாலையில் பிரதமர் ஸ்ரீ ராமஸ்வாமி ரெட்டியார், சட்டசபைத் தலைவர் ஸ்ரீ சிவ சண்முகம் பிள்ளை, மந்திரி கூர்மையா, மாஜி மந்திரி ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை முதலியோர் இன்னும் பல தலைவர்களுடனும், தொண்டர்களுடனும் இராமேசுவரம் வந்து சேர்ந்தனர். நேரம் ஆக ஆக ஜனத்திரள் அதிகமாகி வந்தது. சுமார் ஆறுமணிக்கு ஒரு பெரிய பக்த கோஷ்டியுடன் பிரதம மந்திரி கோவிலுக்குக் கிளம்பினார். நானும் கல்வி ஆசிரியரும் மேல் வேஷ்டியை இடுப்பில் இறுக்கிக் கட்டிக்கொண்டு மறுபடியும் ஆலயப் பிரவேசம் செய்யக் கிளம்பினோம்.

மங்கள கீதம் முழங்க, மேள தாளங்கள் ஒலிக்க, ஜெய கோஷங்கள் வானைப் பிளக்க ஊர்வலமாகக் கிளம்பி எல்லோரும் ஆலயத்திற்குள் பிரவேசித்தோம். பிரதமர் முன்னே 'ஜம்ஜம்' என்று செல்ல ஸ்ரீ சிவ சண்முகம் பிள்ளை 'விடுவிடு' என்று நடக்க, ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை முடுக்காகச்செல்ல, ஸ்ரீ கூர்மையா ஒரே குதூகலத்துடன் ஓட, ஸ்ரீ ராமநாதஸ்வாமி பக்தர்களை யெல்லாம் எதிர்கொண்டு அழைக்க, எல்லோரும் பிராகாரத்தைச் சுற்றிப் பிரதட்சணம் செய்து விட்டுச் சந்நிதிக்கு வந்து சேர்ந்தோம். பக்தர்கள் எல்லாரும் தலைகளில் கதர்ப் பரிவட்டம் கட்டிக்கொண்டு மெய்மறந்து நின்றார்கள்.

ஸ்வாமி தரிசனம், அம்மன் தரிசனம், சுப்பிரமணியர் தரிசனம் எல்லாம் முடிந்து பிறகு கோவிலுக்கு வெளியில் வந்து சேர்ந்தோம். அங்கே பொதுக் கூட்டம் ஏற்கெனவே கூடி யிருந்தது. தலைவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்க ஆயிரக்கணக்கான ஜனங்கள் தயாரா யிருந்தார்கள். இராமேஸ்வரம் காங்கிரஸ் கமிட்டித் தலைவரும் உப்புச் சத்தியாக்கிரஹ வீரருமான ஸ்ரீ பாலசுப்பிரமணியம் தலைமை வகித்தார். தலைவரைச் சூழ்ந்து அமர்ந்திருந்த பிரமுகர்களைப் பார்த்தபோது, சென்னை சட்ட சபையே இராமேசுவரத்திற்கு வந்துவிட்டதோ என்று தோன்றியது. சட்டசபைத் தலைவர் சபாநாயகமாக வீற்றிருந்தார். பக்கத்தில் பிரதம மந்திரி, அண்டையில் மந்திரி கூர்மையா, எம். எல். ஏ.க்கள் அநேகம் பேர். பார்வையாளர்களோ ஏராளமானவர்கள்.

ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ கே.எஸ். முத்துசாமி வாழ்த்துச் செய்தி அனுப்பிய பெயர்களை யெல்லாம் வாசித்து முடித்த பிறகு, சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை அவர்கள் எழுந்து மகாத்மாஜியின் வாழ்த்துச் செய்தியை ஒரு தடவைக்கு மூன்று தடவையாகப் படித்தார். "ஆலயங்களைத் திறந்து விடுவதோடு சாதி இந்துக்கள் தங்கள் உள்ளங்களையும் பரிசுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்னும் மகாத்மாவின் வாக்கியத்தை வற்புறுத்தி, அதைப் பற்றியே முழுதும் பேசினார். "சில இடங்களில் ஆலயப் பிரவேச விழா நடத்திவிட்டு, இரவோடு இரவாகப் 'புண்யா வாசனம்' செய்து விடுகிறார்களாம். ஆகையால் உள்ளம் சுத்தமில்லாமல் வெளி வேஷம் போடுவதில் பிரயோஜனமில்லை" என்று கூறினார். சேலம் ஜில்லாவில் ஒரு ஊரில் ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்குச் சபாநாயகரைக் கூப்பிட்டார்களாம், 'சரி' என்று சபாநாயகரும் சென்றாராம். ஆறு மணிக்கு ஆலயப் பிரவேச வைபவம் நடப்பதாக இருந்ததாம். ஆனால் கோவிலின் சாவியை வைத்திருந்த டிரஸ்டி மூன்று மணிக்கே கோவிலைப் பூட்டிக் கொண்டு போய் விட்டாராம். இதனால் அன்று ஸ்வாமி இரவு 9 மணி வரையில் இருட்டில் இருந்ததுடன் நைவேத்யம் இல்லாமல் பட்டினி கிடக்க நேரிட்டதாம். பின்னர் போலீஸார் வந்து பூட்டை உடைத்துக் கோவிலைத் திறந்து விட்டார்களாம். இப்படி இன்னும் சில சாதி இந்துக்களின் மனம் மாறாமலிருப்பதைச் சொல்லிச் சபாநாயகர் வருத்தப்பட்டார். அவர் பள்ளியில் படிக்கும்போது எத்தனையோ முறை பாதிரிமார்கள், கிறிஸ்து மதத்தில் சேர்ந்து விடும்படி தூண்டினார்களாம். 'ஆப்ரஹாம்' என்று அவருக்குப் பெயர் வைத்து அநேக சௌகரியங்கள் செய்து கொடுப்பதாகச் சொல்லி எவ்வளவோ ஆசை காட்டியுங்கூட, அவர் இந்து மதத்தை விட்டுப் போக விரும்ப வில்லையாம்.

"இப்படி சாதி இந்துக்கள் எவ்வளவோ கொடுமைப் படுத்தியும் அவமானப்படுத்தியும் கூட நாங்கள் இந்து மதத்தை விட்டுப் போகாம லிருக்கிறோமே? அதற்காக நீங்கள் எங்களுக்கு நன்றி காட்ட வேண்டாமா?" என்று சபாநாயகர் கேட்டபோது, சபையோர் முழு மனதுடன் அதை ஆமோதித்தனர்.

திருப்பதிக்கு ஒரு சமயம் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை ராஜாஜியுடன் சென்றிருந்தாராம். திருப்பதி மலைமீதுகூட ஹரிஜனங்கள் ஏறக்கூடாது என்று தெரிந்த



வுடன் ராஜாஜிக்கு மிகவும் வருத்தமாய்ப் போய்விட்டதாம்.

"சிவசண்முகம்! என் உடம்பில் உயிர் உள்ள வரையில் ஹரிஜனங்களின் உரிமைக்காகப் பாடுபடுவேன். என் உயிர் இருக்கும் போதே ஹரிஜனங்கள் ஆலயப் பிரவேசம் செய்வதைக் கண்ணால் பார்ப்பேன்!" என்று ராஜாஜி சொன்னாராம்.

அந்தப்படியே ராஜாஜியின் காலத்திலேயே ஹரிஜனங்களுக்கு இந்த உரிமை கிடைத்து விட்டதென்று ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை பெருமகிழ்ச்சியுடன் கூறினார்.

• • •

அடுத்தபடியாக மாஜி மந்திரி ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை பேசினார்.

"சில கூட்டங்களில் நான் பேசலாமா, வேண்டாமா என்று யோசிப்பதுண்டு. ஆனால் இந்த சந்தர்ப்பத்தில் அந்த சந்தேகத்துக்கு இடமில்லை. நான் பேசித்தான் தீரவேண்டும். பேசக்கூடாதென்று யாராவது சொன்னாலும் கேட்க மாட்டேன். பேசாமலிருக்க என்னால் முடியாது. முடியவே முடியாது!" என்ற பீடிகையுடன் ஆரம்பித்தார்.

"ஹிந்து சமூகத்தில் எங்களுக்குச் செய்யற கொடுமை இவ்வளவு அவ்வளவு அல்ல. ஆனாலும் காந்திஜி, ராஜாஜி போன்றவர்கள் எங்களுக்குக் கைகொடுப்பார்கள் என்று நம்பி நாங்கள் ஹிந்துக்களாக இருந்து கொண்டிருந்தோம். எங்கள் நம்பிக்கை வீண் போகவில்லை. பூனா ஒப்பந்தம் கையெழுத்து ஆனவுடனே காந்திஜி ஒரு ஹரிஜனப் பெண் கையினாலே பழ ரஸம வாங்கிச் சாப்பிட்டு உண்ணாவிரதத்தை நிறுத்தினார். பூனா ஒப்பந்தம் நடந்த காலத்தில் நான் அங்கிருந்தேன். அரை மணி நேரத்துக்கு ஒரு தடவை 'காந்திஜியின் உயிர் மங்கிக் கொண்டிருக்கிறது! இன்னும் உங்கள் பேச்சு முடியவில்லையா?" என்று ஸ்ரீ தேவதாஸ்காந்தி வந்து கேட்பார். ராஜாஜி துடியாய்த் துடிப்பார். டாக்டர் அம்பேத்கரோ பிடி கொடுக்க மாட்டார். இன்னொரு பக்கத்தில் பண்டித மாளவியா வழிக்கு வரமாட்டார். ராஜாஜியின் முழு சாமர்த்தியத்தையும் அந்தச் சந்தர்ப்பத்திலேதான் நான் கண்டேன். அவராலேதான் அம்பேத்கரும் மாளவியாவும் கடைசியில் ஒப்பந்தத்துக்கு இணங்கினார்கள். காந்திஜியும் உயிர் பிழைத்தார். பூனா ஒப்பந்தம் கையெழுத்தானவுடனே, மகாத்மா ராஜாஜியைப் பார்த்து, 'ஒப்பந்தம் கையெழுத்தானது மட்டும் போதாது. சாதி ஹிந்துக்களின் மனம் மாற வேண்டும். இல்லாவிட்டால் நான் உயிர் பிழைத்து என்ன பயன்?' என்று சொன்னார். "'அதற்கு நான் ஆயிற்று. நீங்கள் கவலைப்பட வேண்டாம்!' என்று ராஜாஜி பதில் சொன்னார். அந்த வார்த்தைகள் என் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. ராஜாஜி அப்போது

சொன்ன வார்த்தை இப்போது நிறைவேறி விட்டது! இராமேசுவரம் கோயிலே திறக்கப்பட்டது என்றால் இனிமேல் தீண்டாமை ஏது?" என்று ஸ்ரீ முனிசாமிப் பிள்ளை ஆர்வத்துடன் சரமாரியாகப் பேசியதுடன், ஹிந்து மதத்தில் தீண்டாமைக்கு ஆதாரம் இல்லை என்பதை நிரூபிக்க சமஸ்கிருத சுலோகங்களையும் எடுத்துச் சொல்லிச் சபையோரைத் திக்கு முக்காட விட்டார்.

* * *

பிறகு மந்திரி கூர்மையா அவர்கள் மிக்க உத்வேகத்துடனும் ஆவேசத்துடனும் ஆங்கிலத்தில் பேசினார்.

"கிறிஸ்தவர்கள் வருஷத்துக்கு மூன்று கோடி ரூபாய் மதமாற்றத்திற்காகச் செலவு செய்கிறார்கள். முஸ்லிம்களோ வேறு முறைகளில் ஹரிஜனங்களை மதம் மாற்றப் பார்க்கிறார்கள். 'முஸ்லிம் மதத்துக்கு வந்தால் எல்லா விதத்திலும் சம உரிமை தருகிறோம்; சமமாக நடத்துகிறோம்' என்று சொல்கிறார்கள். ஆனால் சாதி ஹிந்துக்களாகிய நீங்கள் என்ன செய்கிறீர்கள்? போகிறவர்கள் எல்லாம் போகட்டும் என்று சும்மா இருக்கிறீர்கள். அதனுடைய பலன் தான் இன்றைக்கு இந்தியா சின்னாபின்னம் ஆகிறது! இந்தியாவில் இன்றைக்கு முஸ்லிம்கள் பத்துக் கோடிப் பேர் இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் வெளி நாடுகளிலிருந்து வந்தவர்களா? பெரும்பாலும் ஹரிஜனங்கள் முஸ்லிம்கள் ஆகியிருக்கிறார்கள். சாதி ஹிந்துக்களின் கொடுமைதான் இதற்குக் காரணம். நல்லவேளையாக இப்போதாவது சாதி ஹிந்துக்களுக்கு நல்ல உணர்ச்சி வந்து ஹரிஜனங்களுக்குச் சம உரிமை கொடுக்க முன் வந்திருப்பது பற்றிச் சந்தோஷப்படுகிறேன். தீண்டாமைப் பேய் செத்து ஒழிந்து நாசமாய்ப் போய் விட்டது. செத்துப்போன தீண்டாமைப் பேயின் சாம்பலைக் கடலில் கரைப்பதற்காகவே நமது பிரதம மந்திரி இராமேசுவரத்துக்கு வந்திருக்கிறார்!" என்று ஸ்ரீ கூர்மையா சொன்னதும், சபையில் பிரமாதமான கரகோஷம் எழுந்தது. ஜனங்களின் உற்சாகத்தைக் கண்டதும் மந்திரி கூர்மையா அவர்களின் உற்சாகமும் பன்மடங்கு ஆகிவிட்டது. "ஹிந்து மதத்தில் தீண்டாமைப் பேய் ஒழிந்து விட்டபடியால், இனிமேல் நான் ஊர் ஊராகச் சென்று ஹிந்து மதப் பிரசாரம் செய்வதற்கே என் வாழ் நாளைச் செலவிடப் போகிறேன்!" என்று சொல்லிச் சபையின் உற்சாகத்தை நூறு மடங்கு ஆக்கிவிட்டார்.

பழனி ஸ்ரீ பாலகிருஷ்ணன் எம்.எல்.ஏ. ரொம்ப ஹாஸ்யமாகப் பேசக்கூடிய திறமையுள்ளவர் என்று தெரிந்தது. முதலில் அவர் பெரிய நாஸ்திகராக இருந்தாராம். பழனிக் கோவில் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டபோது பழனி ஆண்டவரின் சந்நிதிக்குப் போனாராம். பழனி ஆண்டவரைத் தரிசனம் செய்ததிலிருந்து அவருக்குத் தெய்வ பக்தி உண்டாகி விட்டதாம்.

பிறகு, ஹரிஜனங்களை சாதி ஹிந்துக்கள் கேவலப்படுத்தி வந்ததற்குச் சில ஹாஸ்யமான உதாரணங்களை ஸ்ரீ பாலகிருஷ்ணன் சொன்னார். 'ராமசாமி', 'குப்புசாமி', 'பழனிசாமி' என்று ஹரிஜனங்களுக்குப் பெயர் இருந்தால் சாதி ஹிந்துக்கள் 'சாமி'யை விட்டுவிட்டு 'ராமா!' 'குப்பா!' 'பழனி!' என்றுதான் அழைப்பார்களாம். இதற்காக ஒரு ஹரிஜனர் தனியாகச் 'சாமி' என்று மட்டும் பெயர் வைத்துக் கொண்டாராம். அவரை 'அடே சாமியான்!' என்று அழைத்தார்களாம். இதை ஸ்ரீ பாலகிருஷ்ணன் சொன்னபோது சபையோர் சிரித்தார்கள். "நீங்கள் சிரிக்கிறீர்கள். 'பறையன்' 'பள்ளன்' என்றெல்லாம் எங்களைச் சொல்லும்போது எங்கள் மனது எவ்வளவு புண்படுகிறது தெரியுமா?" என்று சொல்லி விட்டு ஸ்ரீ பாலகிருஷ்ண சாமி சோக ரசத்துடன் பேச்சை முடித்தார்.

(ஸ்ரீ பாலகிருஷ்ணன் அவர்களுக்கு இனிமேலாவது 'சாமி' விஷயமான மனக்குறை இருக்கக்கூடாது என்பதற்காகவே, 'பாலகிருஷ்ண சாமி' என்று எழுதி யிருப்பதை அவர் கவனிக்கக் கோருகிறேன்.)

• • •

பிரதம மந்திரி ஓமந்தூர் ராமஸ்வாமி ரெட்டியார் அவர்கள் பேச ஆரம்பித்ததும் சபையில் நிசப்தம் நிலவியது.

"சட்டசபைத் தலைவர் ஒரு விஷயத்தை என் கவனத்திற்குக் கொண்டு வந்தார். அதாவது கோவிலுக்குள் ஹரிஜனங்களை ஒரு நாள் விட்டு விட்டுப் பிறகு புண்யா வாசனம் செய்வதாகச் சொன்னார். அதைக் கேட்டு நான் மிகவும் வருந்துகிறேன். கோவிலைத் திறந்து விட்ட பிறகு புண்யா



வாசனம் செய்வது சட்ட விரோதம். அப்படி யாராவது செய்தால் கடுமையான தண்டனைக் குள்ளாவார்கள். இனிமேல் கோவில்களிலோ மற்றும் பொது இடங்களிலோ ஹரிஜனங்களை வரக்கூடாது என்று சொல்கிறவர்களுக்கும் தண்டனை கிடைக்கும். ஆனால் தண்டனைக்குப் பயந்து மட்டும் ஹரிஜனங்களுக்கு உரிமை கொடுங்கள் என்று நான் சொல்லவில்லை. சமூகத்தில் ஏற்பட்டுவிட்ட மூட வழக்கத்தை ஒழிக்கவே சட்ட சபையில் சட்டம் செய்திருக்கிறோம். நீங்கள் ஓட்டுக் கொடுத்து அனுப்பியவர்கள் நாங்கள். உங்களுடைய மாதிரி சபைதான் இப்பொழுது நடைபெறுகிறது. ஆகையால் நாங்கள் செய்யும் சட்டங்களை நீங்கள் செய்ததாகவே பாவித்து அதன்படி நடக்க வேண்டும். இல்லையெனில் உங்களை நீங்களே அவமதித்துக் கொண்டவர்களாவீர்கள்.

"தேசத்தில் பொதுவாக ஒழுக்கமும் நாணயமும் குறைந்து வருவதைப் பார்க்க எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. தரும உணர்ச்சி குன்றி வருகிறது. சமூகத்துக்கும் தேசத்துக்கும் இது ரொம்பவும் அபாயம். வியாபாரிகள் கள்ள மார்க்கெட் வியாபாரம் செய்கிறார்கள். அதைக் கண்டு பிடிக்க முயன்றால், அதிகாரிகளும் உடந்தையாக இருப்பதாய்த் தெரிகிறது. அதிகாரிகளையும் சேர்த்துப் பிடித்து விடலாமென்று பார்த்தால், பொது ஜனங்களே அவரவர்களின் சுயலாபத்துக்காக மேற்படி குற்றங்களுக்கு உடந்தையாக இருக்கிறார்கள். இந்நிலையில் எப்படி நாடு முன்னேற்ற மடையும்? இந்தப் பிரசித்தி பெற்ற இராமேசுவரம் கோவிலில் ஹரிஜனங்களுக்கு சுவாமி தரிசன உரிமை அளித்தது பற்றி மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன். ஆனால் நாங்கள் அப்பால் போனவுடன் புண்யாவாசனம் செய்து விடாதீர்கள்!" என்று இவ்விதம் பிரதம மந்திரி கம்பீரமாகவும் கண்டிப்புடனும் பேசி வந்ததைச் சபையோர் மிகவும் சிரத்தையுடன் கேட்டார்கள். அன்று பிரதம மந்திரியின் பேச்சு, தேசத்தின் க்ஷேமத்திலும் முன்னேற்றத்திலும் அவருக்கு எவ்வளவு கவலை இருந்தது என்பதைத் தெளிவாக்கியது.

இடையிடையே, சம்ஸ்கிருத சுலோகங்களையும் திருமூலரின் திருமந்திரப் பாடல்களையும் பிரதம மந்திரி எடுத்துச் சொல்லி நமது சமயத்தின் உண்மைத் தத்துவங்களை விளக்கினார்.

கடைசியில், "இன்று தமிழ் நாட்டில் ஆலயப் பிரவேச இயக்கம் வெற்றிகரமாக நடந்ததற்குக் காரணம் ராஜாஜியின் தொண்டு தான். அதை நாம் ஒருநாளும் மறக்க முடியாது" என்று கூறிவிட்டுப் பலத்த கரகோஷங்களுக் கிடையில் அமர்ந்தார்.

* * *

இன்னும் பேசுவதற்குக் கல்கி ஆசிரியரும் ஸ்ரீ சின்ன அண்ணாமலையும் (அதா

வது அடியேன்தான்) பாக்கி யிருந்தோம். "பிரதம மந்திரி இவ்வளவு கம்பீரமாக எல்லா விஷயங்களையும் பேசிவிட்ட பிறகு நாம் என்ன பேச இருக்கிறது? வேண்டாம்!" என்று கல்கி சொல்லிப் பார்த்தார். ஆனால் அதை யார் கேட்கிறார்கள்? அக்கிராசனம் வகித்த ஸ்ரீ பாலசுப்பிரமணியம் எழுந்து "நேரம் ரொம்ப ஆகிவிட்டது. ஆனபோதிலும் கல்கி ஆசிரியரை ஐந்து நிமிஷம் பேசும்படி கேட்டுக் கொள்கிறேன்!" என்று சொன்னதிலேயே சபையில் பெரிய கலவரம் உண்டாகிவிட்டது. "ஐந்து நிமிஷமா? அது பொதுஜன அபிப்பிராயத்துக்கு விரோதம். ஒரு மணி நேரமாவது பேசவேண்டும்" என்ற கூக்குரல்கள் சபையின் நாலாபுறத்திலிருந்தும் எழுந்தன.

இதற்கிடையில் கல்கி ஆசிரியர் எழுந்தார். "இந்தக் கூட்டத்தின் தலைவர் சொன்னபடி நான் ஐந்து நிமிஷம் பேசப் போவதில்லை. நாலே முக்கால் நிமிஷந்தான் பேசுவேன்!" என்று கல்கி ஆரம்பத்தில் போட்ட போடே சபையைக் கலகலக்கச் செய்து விட்டது.

"பறையன் பள்ளன் என்று கூறும் போது தங்களுடைய மனம் புண்படுவதாக ஸ்ரீ பாலகிருஷ்ணன் சொன்னார். ஆனால் சாக்ஷாத் பரமசிவனையே ஒரு சமயம் பறையன் என்று சிலர் சொன்னார்கள். சோமயாஜி என்னும் சிவபக்தர் ஒரு யாகம் செய்தார். அந்த யாகத்துக்குச் சிவபெருமானே நேரில் வந்து அவிர்ப்பாகம் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று பிரார்த்தித்தார். சிவபெருமான் 'அப்பனே! அப்படியே வருகிறேன். ஆனால் நான் வரும்போது நீ தூங்கிவிடாதே!' என்று சொன்னார். பரமசிவனே வரப்போகிறார் என்று அறிந்த சாஸ்திரிகளும் தீக்ஷிதர்களும் வேதமந்திரங்களைப் பலமாகக் கோஷித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு வெட்டியான் பறை கொட்டிக் கொண்டும், நாலு வேட்டை நாய்களைக் கட்டிக் கொண்டும் அங்கே வந்தான். அவனைப் பார்த்ததும், 'பாவி, பறையா! சண்டாளா! போ! போ! தூரப் போ!' என்று எல்லாரும் கத்தினார்கள். 'ஏன் ஐயா, கூச்சல் போடுகிறீர்கள்? போகச் சொன்னால் போய் விடுகிறேன்!' என்று சொல்லிவிட்டு வெட்டியான் போய்விட்டான். பரமசிவன் வரவே யில்லை. பிராமணர்கள் கோபித்துக்கொண்டு சோமயாஜியையும் திட்டிவிட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். சோமயாஜி கோவிலுக்குப் போய்ப் பரமசிவன் பாதத்தில் முட்டிக் கொண்டு உயிரை விடப்போனார். பரமசிவன், 'அப்பனே! என்னை நொந்து என்ன பயன்? நான்தான் வந்தேனே? நாலு வேதங்களும் என்னுடன் நாலு நாய்களைப் போல் வந்தனவே! நான் வரும்போது நீ கண்களை மூடிக்கொண்டு விட்டாய். எவ்வளவோ வேத சாஸ்திரங்கள் படித்திருந்தும், 'எல்லா உயிர்களிலும் நான் இருக்கிறேன்' என்ற உண்மையை நீ அறியாமல் என்னைப் பார்த்துப் 'போ!' என்றாய். நான் திரும்பி வந்துவிட்டேன்!' என்று அருளினார். தஞ்சாவூர் ஜில்லாவில் எங்கள் கிராமத்துக்குச் சமீபத்திலுள்ள கிராமத்தில் வருஷந்தோறும் சோமயாஜி நாயனார் உற்சவம் நடக்கிறது. பரமசிவன் வெட்டியான் வேஷத்தில் யாகசாலைக்கு வருவதும், அங்கிருந்து தாக்கப்படுவதும் அந்த உற்சவத்தில் நடைபெறுகின்றன. இப்படி எத்தனையோ சரித்திரங்கள் நமது நாட்டில் வழங்கி வருகின்றன. எவ்வளவோ பெரியவர்கள் சாதி வேற்றுமை, தீண்டாமை இவைகளைக் கண்டித்துப் போதனை செய்திருக்கிறார்கள். ஆனால் எல்லாம் இதுவரையில் ஏட்டுச் சுரைக்காயாக இருந்து வந்தது. நமது காலத்தில் காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தியினால் தீண்டாமை உண்மையாக அழிந்து வருகிறது. ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை முருகன் என்றதும் உருகிப் போகிறவர். ஸ்ரீ முனிசாமிப் பிள்ளையை நெற்றியில் விபூதி இல்லாமல் நான் பார்த்ததே கிடையாது. இப்படிப்பட்ட பரம பக்தர்களைக் கோவிலுக்குள்ளே வரக் கூடாது என்று சொன்னால், அப்படிப்பட்ட கோவிலில் நிச்சயமாகச் சுவாமி இருக்கமாட்டார்!" என்று கல்கி ஆசிரியர் கூறிச் சபையோர் எல்லோரையும் உருக்கிவிட்டார்.

கடைசியாகக் கல்கி கூறியதாவது:— "நான் சிறு பையனாயிருந்தபோது இராமேசுவரத்துக்குச் சந்தான பாக்கியத்தைப் பெறுவதற்காகப் பலர் வந்தார்கள். இப்போதெல்லாம் இருக்கிற சந்தானத்துக்குச் சோறுபோடுவதே கஷ்டமாயிருப்பதால் அதிகம்பேர் வருவதில்லை. எல்லாம் பிரிட்டிஷ் ஆட்சியினால் ஏற்பட்ட கொடுமைதான். அந்த பிரிட்டிஷ் ஆட்சி இந்த வருஷம் ஒழியப் போகிறது. இப்படிப்பட்ட புண்ணியமான வருஷத்தில் தமிழ் நாட்டில் தீண்டாமைப் பேயையும் நாம் ஒழித்துக் கட்டி விட்டோம். இராமேசுவரத்தின் சரித்திரத்தில் இரண்டு தினங்கள்

மிகவும் முக்கியமானவை. ஒன்று, ஸ்ரீ ராம பிரான் பாலம் கட்டுவதற்குமுன் இங்கே லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்த தினம். இன்னொன்று, சகல ஹிந்துக்களுக்கும் ஆலய தரிசன உரிமை அளிக்கப்பட்ட இன்றைய தினம். நமது பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியார் சிறந்த ஆஸ்திகர்; மகாத்மாவின் பக்தர்; முன்னொரு தடவை இந்த இராமேசுவரத்துக்கு அவர் வந்தார். ஆனால் ஆலயத்துக்குள் சென்று சுவாமி தரிசனம் செய்யவில்லை. ஹரிஜனங்களை அப்போது ஆலயத்துக்குள் விடாமலிருந்ததுதான் காரணம். சேதுவில் ஸ்நானம் செய்து விட்டுத் திரும்பி விட்டார். மகாத்மா காந்தியின் எல்லாக் கொள்கைகளையும் அவ்வளவு வைராக்யத்துடன் பின்பற்றுகிறவர். அத்தகைய உத்தமருடைய தலைமையில் இந்த வைபவம் நடந்தது நம்முடைய பாக்கியம்!" என்று கல்கி பிரசங்கத்தை முடித்து விட்டு, "சரியாக நாலே முக்கால் நிமிஷந்தானே ஆயிற்று?" என்று சொல்லிக் கொண்டே அமர்ந்தார். அப்போது ஏற்பட்ட கரகோஷ அமர்க்களத்தில் நிமிஷக் கணக்கை யார் கவனித்தார்கள்?

•        •        •

பிறகு அடியேனுடைய கதா காலட்சேபம் ஆரம்பமாயிற்று. "ஓட்டடா! ஓட்டடா!" என்ற பாட்டை நான் தொடங்கியதும், ஏற்கெனவே ஓடப் போவதாகச் சொல்லிவிட்ட வெள்ளைக்காரர்களைத்தான் ஓட்டச் சொல்கிறேன் என்று நினைத்துச் சபையோர் சந்தோஷப் பட்டார்கள். பிறகு, "தீட்டடா!" என்றதும் சபையிலிருந்த அஹிம்சை வாதிகள் கொஞ்சம் திகைத்தார்கள். "தீண்டல் என்ற தீமையைத் தீட்டடா!" என்றதும் அனைவரும் மூக்கில் விரல் வைத்து அதிசயப்பட்டார்கள். பிறகு "சங்காதம் கேட்குது!" என்று நான் பாடியதும், "எங்கே கேட்குது?" என்று அங்கு மிங்கும் பார்த்தார்கள். பாட்டுக்குப் பிறகு அடியேன் பேசினேன். என்ன பேசினேன் என்பதைப் பற்றி இங்கே விஸ்தரிக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் கூட்டம் முடிந்த பிறகு நடந்ததை மட்டும் சொல்லி வைக்கிறேன். பேச்சு என்றால் அன்றைக்கு நான் பேசியதுதான் பேச்சு என்று எல்லாரும் என்னைப் பாராட்டினார்கள்! அவர்களுக்கு நான், "ஆமாம்; வாயிலிருந்து வருவது பேச்சு; மூக்கிலிருந்து வருவது மூச்சு; இரண்டும் நின்றால் போச்சு!" என்றேன். இப்படியாக, "ஆகாச வாணம் போன இடத்தைக் காணோம்" என்பதைப்போல் என் பேச்சும் முடிந்தது.

•        •        •

கடைசியாக வந்தனோபசாரம் சொல்ல ஸ்ரீ சோமநாதன் செட்டியார் அவர்கள் எழுந்தார். வந்தவர்களுக் கெல்லாம் வந்தனம் சொல்லிய பிற்பாடு, ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கும் தம்முடைய விசேஷ வந்தனத்தைத் தெரிவித்துக் கொண்டார்!

அகில உலக ரயில்வே மகாநாட்டுக்காக ஸ்ரீ சோமநாதன் செட்டியார் ஆகாச விமானத்தில் பிரயாணப்படுவதாக இருந்தாராம். இந்த ஆலயப் பிரவேசத்தை முன்னிட்டு மேற்படி பிரயாணத்தை நிறுத்தினாராம். அவர் எந்த விமானத்தில் புறப்படுவதாக இருந்தாரோ, அந்த விமானம் நடு வழியில் விழுந்து நொறுங்கிப் பலர் இறந்து போனார்களாம். "ஆகவே, இந்த ஆலயப் பிரவேசத்தினால் நான் உயிர் தப்பிப் பிழைத்தேன்!" என்று சொன்னதும், சபையோர் "ஆஹா! ஆஹா!" என்று சொல்லி ஆரவாரம் செய்தார்கள்.

இப்படியாக இந்தியாவின் தென் கோடியில் உள்ள புண்ய ஸ்தலமான இராமேசுவரத்தில் ஆலயப் பிரவேச வைபவம் பிரமாதமாக நடந்தேறி முடிந்தது! "ஆலயப் பிரவேசம் என்றால் இதுதான் ஆலயப் பிரவேசம்!" என்று சொல்லும்படியாக எல்லாம் நடந்தது. இராமேசுவரக் கோயில் திறப்போடு, ஆலயப் பிரவேச இயக்கமே பூரண வெற்றி பெற்று முடிவடைந்தது என்றே சொல்ல வேண்டும். இனிமேல் ஆலயப் பிரவேசம் செய்வதற்குத் தமிழ் நாட்டில் பெரிய ஆலயம் எதுவும் கிடையாது.

ஆகவே, நானும் என்னுடைய கடைசி ஆலயப் பிரவேசக் கட்டுரையைப் பிரமாதமான முறையில் முடிக்க விரும்புகிறேன். கல்கி ஆசிரியர் முன்னொரு தடவை ஒரு கலியாணக் கட்டுரையைப் பின்வருமாறு முடித்திருந்தார்.

"கடைசியாக ஒரு வார்த்தை! மங்களம்!!"

அதுவே என் கடைசி ஆலயப் பிரவேசக் கட்டுரையின் முடிவாகவும் இருக்கட்டும்.

"மங்களம்!!!"




அப்பொழுதுதான் மெத்த முகூர்த்தமெல்லாம் ஒருவாறு நடந்து முடிந்தது. 'அப்பாடா!' என்று கொஞ்ச நேரமாவது சிரமபரிகாரம் செய்து கொள்ளலாமென்று வாசற்புறம் இருந்த ஓர் அறையில் படுத்துக் கொண்டேன். கூடத்தில் புருஷர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நான் படுத்திருந்த அறைக்கு அடுத்த அறையில் பெண்கள் சாப்பிடுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தனர்.

என்னைப் பற்றி யாரோ பேசுவது காதில் படவே, அரைத் தூக்கத்தி லிருந்த நான் சற்று உற்றுக் கேட்டேன். "சீதா ரொம்ப அதிர்ஷ்டசாலி!" என்றது ஒரு குரல். அது காமுவின் குரல்தான்; அந்தக் குரலில் பொறாமையின் சாயை தொனித்தது. வேறொரு குரல், "சீதாவின் பொறுமைக்கும், தங்கமான குணத்திற்கும் தங்கமான கணவர் வாய்த்திருப்பது பொருத்தம்தானே!" என்றது. அது வசந்தாவின் குரல். என் பிராண சிநேகிதையான அவளுக்கு என் சந்தோஷத்திலும் பங்குண்டல்லவா? "அவள் ஆத்துக்காரரென்ன, அவள் மாமியார் இப்படிப் பிரியமாக இருப்பதுதான் ஆச்சரியம்!" என்று ஒரு பெரு மூச்சுடன் துக்கம் தோய்ந்த குரலில் கூறினாள் மீனு.

நாங்க ளெல்லோரும் ஒரே வீதியில் வசிப்பவர்கள் — இல்லை, வசித்தவர்கள் என்று சொல்ல வேண்டும். குழந்தைப் பருவ முதல் ஒன்றாக வளர்ந்தவர்கள். எங்களுக்குள் எவ்வளவோ சில்லறைச் சண்டைகள் இருந்தாலும் எத்தனையோ நாட்களை இன்பமாகவும் கழித்திருக்கிறோம். ஆனால், இன்று வாழ்க்கையின் வெவ்வேறு பாதைகளில் நாங்கள் பிரிந்து போய் விட்டோம்.

மீனு பெரிய பண்ணை ரங்கய்யரின் அருமைப் புதல்வி. அவளுக்கும் எனக்கும் ஒரே வருஷத்தில்தான் கல்யாணம் நடந்தது. அவள் கணவன் ஒரு 'அம்மாக் கோதண்டராமன்!' 'தாய்சொல் மிக்க மந்திரமில்லை' அவனுக்கு. ஆனால் அந்த அம்மாவோ பத்திரகாளியின் அவதாரம். பார்ப்பதற்கு மட்டும் 'இந்தப் பூனையும் பால் குடிக்குமா!' என்றுதான் இருப்பாள். இளம் வயதிலேயே கைம்பெண்ணானவள். இந்தப் பிரபஞ்சத்தில் அவளுக்குச் சர்வமும் அவளுடைய மகன்தான். மீனு தனக்குப் போட்டியாக வந்து விட்டதாக அவள் எண்ணினாளோ என்னமோ, முதலிலிருந்தே மாமியாருக்கும், மாட்டுப் பெண்ணுக்கும் பதினெட்டாம் பொருத்தம். முடிவில் என்ன, இப்பொழுது ஆறுமாத காலமாக மீனு தன் பிறந்த வீட்டில்தான் இருக்கிறாள். என் தகப்பனாரின் நண்பர் ஒருவர், "நம்ம பெண்ணின் ஜாதகத்தை மாமியாராக வரப் போகிறவளின் ஜாதகத்துடன் பொருத்தம் பார்த்

தால் போதும், பாக்கி யெல்லாம் சுபமாகவே முடியும்!" என்பார். அது எவ்வளவு உண்மை என்பதை அநேகர் அறியவே யில்லை.

வசந்தா என் உயிர்த் தோழி. அவளுக்குத்தான் எத்தனை பெருமை என்னைப் பற்றி! நான் இன்று சந்தோஷமாக இருப்பது அவளால்தான். இந்தச் சமயத்தில் அவள் இங்கு இருக்க நேர்ந்தது பற்றி எனக்குப் பரமானந்தம். வசந்தா என்னை விட இரண்டு வயது மூத்தவள். இருந்தாலும் எங்களுக்குள் இணை பிரியா நட்பு. பாவம், வசந்தாவும் வாழ்க்கையின் கஷ்டங்களை உணர்ந்து அனுபவம் முதிர்ந்தவளாகி விட்டாள். வயது இருபத்தி நான்கே யானாலும், அதற்குள்ளேயே அவள் முகத்தில் கவலையின் ரேகை படர்ந்துவிட்டது.

அவள் கணவர் ஒரு டாக்டர். யுத்தத்தில் அவரும் சேர்ந்தார். இத்தாலியில் காணமல் போனவர், மூன்று வருடங்களுக்குப் பின் திரும்பி வந்து சேர்ந்தார். ஆனால் வசந்தா அனுப்பிய புருஷனாக அவர் வரவில்லை; யுத்த அரக்கனுக்கு ஒரு காலையும், கேட்கும் சக்தியையும் பலி கொடுத்து விட்டு வந்தார். ஆம், வசந்தாவின் கணவர் இப்பொழுது நொண்டி! இனி அவர் தனக்குப் பிரியமான 'டென்னி'ஸை ஒருதரம் கூட விளையாட முடியாது. ஏன், சுயேச்சையாக நடக்கக் கூட முடியாது. காதும் கேட்காததால் சகலத்திற்கும் தன் மனைவியையே நம்பி யிருந்தார். ஒரு சிசுவைப் போல அவரைக் கவனிக்கவே வசந்தாவுக்குப் பொழுது போதவில்லை. தன் கணவரின் தேக நலனுக்காகவே அவள் எங்கள் ஊருக்கு வந்திருந்தாள். தினந்தோறும் சாயங்கால வேளைகளில் அவரை ஒரு நாற்காலியில் உட்காரவைத்து, வசந்தா தோட்டத்தில் தள்ளிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் என் கண்களில் நீர் ததும்பும். ஆனால் அவள் அதைப்பற்றித் துக்கப்படவே யில்லை. தன் கணவர் முக்கால் ஆளாகவாவது திரும்பக் கிடைத்தாரே என்ற சந்தோஷம் போதும்!

எங்கள் மூவரில் ரொம்பப் பரிதாபகரமான வாழ்க்கை காமுவினுடையது. அவளுக்கு என்னைக் கண்டால் எப்பொழுதுமே அதிகம் பிடிக்காது. ஆகவே, இன்று அவள் என்னைக் கண்டு பொறாமைப் படுவதில் ஆச்சரியமில்லை. அவள் புருஷன் ஒரு குடிகாரன்; ஸ்த்ரீ லோலன்; அவளைச் சற்றும் மதியாதவன். சிறு வயதில் காமு என்ன ஆர்ப்பாட்ட மெல்லாம் செய்வாள்! ஒரு நவராத்திரி வந்தால் எங்கள் வீட்டுச் சிறிய கொலுவை எப்படிப் பரிகசிப்பாள்!

என் பருத்திப் பாவாடையைக் கண்டால் அவளுக்குக் கட்டோடு பிடிக்காது. குலுங்கக் குலுங்க நகைப்பாள். அப்பாவுக்கு நாங்கள் மூன்று பெண்கள். சம்பளமோ முப்பது ரூபாய். இதில் அவர் பட்டுப் பாவாடைக்கு எங்கே போவார்?

வயது வந்த பிறகும் எங்களை இகழ்ந்தே பேசுவாள் காமு. பள்ளிக்கூட வாத்தியாராயிருந்தால் என்ன, அது அவ்வளவு அவமானகரமான விஷயமா? அசட்டுப் பெண், அதற்காக என் தந்தையைப் பரிகசிப்பதில் அவளுக்கு ஒரு திருப்தி. எனக்கோ ரோசம் பொத்துக்கொண்டு வந்துவிடும். அவளுடன் சண்டைக்குப் போய் விடுவேன். நடுவில் வசந்தா இருந்தால்தான் எங்கள் இருவருக்குமிடையே சமாதானம் ஏற்படும்.

இன்று என்னைக் கண்டு பெருமூச்சு விடும் இதே காமு, நான்கு வருடங்களுக்கு முன் என்னைப் பார்த்துக் கேலியாக நகைத்தது இன்னும் என் மனதை விட்டு அகலவில்லை.

என் கல்யாணத்திற்கு முதல் நாள் சம்பந்திகள் வந்து இறங்கி யிருந்தார்கள். சாயங்காலம் ஜானவாஸத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் நடந்து கொண்டிருந்தன. என் மனம் 'திக், திக் என்று அடித்துக் கொண்டது. எதைப் பற்றியுமே சிந்திக்காமல் ஏனோ பொங்கி வரும் கண்ணீரை அடக்கிக் கொண்டு



அங்கு மீண்டும் வீட்டிற்குள் நடந்து கொண்டிருந்தேன். சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டிலுள்ளவர்கள் அனைவரும் சீர் வரிசைகளுடன் கோவிலுக்குப் புறப்பட்டு விட்டனர். பாட்டி மாத்திரம்தான் வீட்டில் இருந்தாள். நான் சுவாமி படத்திற்கு அருகில் நின்றுகொண்டு, எனக்குப் பெரிய மனோதிடத்தை அளிக்குமாறு பகவானை வேண்டிக் கொண்டிருந்தேன். பாட்டி என்னையே உற்றுக் கவனிப்பது, சுவாமியின் பின்னால் மாட்டியிருந்த நிலைக்கண்ணாடியில் நன்கு தெரிந்தது. என் வருத்தத்தை அவள் கூட அறியக் கூடாதென்று உடனே வெளியே வந்தேன். "சீதா, இங்கே வா!" என்று அவள் என்னைக் கனிவுடன் அழைத்தாள்.

"என்ன, பாட்டி!" என்று கேட்டேன்.

"ஒண்ணுமில்லே, இப்படி சித்தே நில்லு! கன்னியாக இன்னிக்கு மாத்திரம் தானே இருப்பே! இப்பவே உன்னை நன்னாப் பார்த்துடறேன்!" என்றாள்.

வெட்கத்தால் என் தலை கவிழ்ந்தது. "நன்னாயிருக்கு, என்னைப் பார்த்தே இப்படி வெட்கப்பட்டா, ஒங்க புக்காத்து மனுஷாளோடே நீ எப்படித்தான் பழகப் போறயோ!" என்றாள் பாட்டி.

நான் மௌனம் சாதித்தேன். பாட்டியே மீண்டும் ஆரம்பித்தாள்: "அது கிடக்கட்டும்; நீயும் என்ன, எங்களாட்டமா ஆத்துக்காரரை முன்னாடி பார்க்காமலா கல்யாணம் பண்ணிக்கப் போறே? ஒங்க தாத்தா மூஞ்சியை நாலு நாள் கல்யாணத்தின்போதுகூட நான் சரியாப் பார்க்கல்லே! இந்தக் காலத்துப் பசங்க அப்படியா யிருக்கு?—போ, மேளச் சத்தம் கேட்கிறது. மொட்டை மாடியிலேருந்து ஊர்வலத்தைப் பார்! சீக்கிரம் போ, இல்லாட்டா எல்லாரும் வந்துடுவா! அப்புறம் பார்க்க முடியாது!" என்றாள்.

"இல்லே, பாட்டி! எனக்குப் பார்க்க வேண்டாம்!" என்று நான் எவ்வளவோ சொல்லியும் அவள் கேட்கவில்லை. ஆகவே, பாட்டியைத் திருப்தி செய்வதற்காக நான் மாடிக்குப் போனேன்.

நாமுவின் வீடும் என் வீடும் அடுத்தடுத்து இருந்தன. எங்கள் மொட்டை மாடியில் நின்றால், அவர்கள் மாடியில் பேசுவது நன்றாகக் கேட்கும். அவர்கள் வீட்டிலும் எல்லோரும் வேடிக்கை பார்க்க மாடிக்கு வந்திருந்தார்கள். ஊர்வலம் எங்கள் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. ஆனால் 'அவர்' முகம் மட்டும் இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. மேளச் சத்தத்திற்கு நடுவில் அடுத்த வீட்டில் உரத்துப் பேசுவது கேட்டது. "நொண்டிப் பிள்ளைக்கா இத்தனை அமர்க்களம்! அடேயப்பா, பேண்டு வாத்தியம் வேறேயா!" என்றாள் நாமு எகத்தாளமாக. இதைக் கேட்டு அவளுடன் இருந்த மற்றவர்கள் சிரித்தார்கள். எனக்கோ துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்துவிட்டது. ஓசைப்படாமல் ஓர் அறைக்குள் போய்க் குப்புறப் படுத்துக் கொண்டேன். விம்மலை அடக்க முடியாமல் 'ஓ'வென்று அழுது விட்டேன். என் துக்கத்தில் அப்பா வந்ததைக்கூட நான் உணரவில்லை. "சீதா, சீதா!" என்று அவர் இரைந்து கூப்பிட்ட பிறகுதான் சுய நினைவு வந்தது.

"என்னம்மா, இது! ஏன் அழுகிறாய்? உன் இஷ்டப்படிதானே கல்யாணம் நடக்கிறது? அன்றே நீ வேண்டாமென்று சொல்லியிருந்தால் நான் வற்புறுத்தியிருப்பேனா?" என்று அவர் தழுதழுத்த குரலில் கேட்டது, எனக்கு வேதனை யளித்தது.

அப்பா சொல்வதில் துளிக்கூடப் பிசகில்லை. இது நான் சம்மதித்துச் செய்து கொள்ளும் கல்யாணமே. சட்டென்று சமாளித்துக் கொண்டு, "ஒன்றுமில்லை, அப்பா! எனக்கு இப்பொழுதும் பூரண சம்மதமே!" என்று நெஞ்சம் பிளக்கப் புளுகினேன்.

"ஆனால் வா, கீழே உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!" என்று அழைத்தார் அவர்.

அன்றிரவு சாப்பாடானதும் நானும், வசந்தாவும் பேசிக்கொண்டிருந்தோம். சாயங்காலம் நடந்தது பூராவையும் அவளிடம் சொன்னேன். "நான் என்ன பண்ணுவது, வசந்தா! ஒரு பெண்ணிடம் 'ஐம்பத்து மூன்று வயதுக் கிழவனை மணக்கிறாயா, அல்லது ஒரு யுவனை—ஆனால் ஒரு கால் நொண்டியானவனை மணக்கிறாயா?' என்று கேட்டால் அந்தப் பெண் யார் வேண்டும் என்பாள்?" என்று கேட்டேன்.

அதற்கு வசந்தா, "போடி, பைத்தியம்! உன் அதிர்ஷ்டம் உனக்குத் தெரியவில்லை. சாயங்காலம் அதற்குத்தான் பலி கொடுக்கக் கொண்டு வந்திருக்கும் ஆடு மாதிரி முகத்

தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தாயோ? பெரிய தியாகம் செய்வதாக எண்ணம் போலிருக்கிறது!" என்று ஏளனமாக நகைத்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆமாம், அதுவரை மற்றவர்கள் எனக்கு ஏதோ பெரிய அநீதி இழைத்து விட்டதாகவே நான் கோபம் கொண்டிருந்தேன். வசந்தா என்னைக் கவனியாமலேயே பேசிக்கொண்டு போனாள்: "அவர்கள் காலேஜுக்கே 'அவர்' பெருமை யளிக்கிறாராம். அண்ணா சந்தானம், ரகுவை — அதாவது உனக்குக் கணவனாக வரப் போகிறவரை — எவ்வளவு புகழ்கிறான், தெரியுமா? 'அவர் ஒரு பெரிய விஞ்ஞானியாக விளங்கப் போகிறார் பார்!' என்று அவன் பந்தயம் வைக்கிறான். உன் பச்சாதாபம் ஒன்றும் அவருக்குத் தேவையில்லை. நொண்டி யென்றால் என்ன, அவன் மனிதனில்லையா? அவர்களுக்கு இருதயம், உணர்ச்சி ஒன்றுமே கிடையாதா? கால் தானே நொண்டி, மனம்கூடவா நொண்டி? நொண்டிகள் உணர்ச்சியற்ற ஜடங்களாக இருக்க வேண்டுமென்று ஏன் உலகம் எதிர்பார்க்கிறது? அவனே பணக்காரப் பிள்ளையாக இருந்தால் பெண் கொடுக்க 'நீ, நான்' என்று போட்டி யிடுவார்கள். அந்த ஐம்பத்து மூன்று வயதுக் கிழவனுக்குப் பணம் இருப்பதால்தானே உன் தந்தையும் அருமையாக வளர்த்த பெண்ணைக் கொடுக்க முன் வந்தார். கிழவனானாலும் பணமிருந்தால் அவன் சுக போகங்களை அனுபவிக்கலாம்; ஒருவன் அதிகப் பணமில்லாமலும், அங்கஹீனனாகவும் இருந்து விட்டால்—அவன் வாலிபனாக இருந்தாலும் ஒரு சுகமும் வாழ்க்கையில் அனுபவிக்க அவனுக்கு உரிமையில்லை! இது ஏன்? உனக்குப் பிறக்கும் பிள்ளை நொண்டியாயிருந்தால் அவன் மீதிருக்கும் பாசம் குறைந்து விடுமா?" என்று அவள் வினவினாள்.

அவள் கேள்விகளுக்கு என்னால் பதில் கூறவே இயலவில்லை. என்னைப் பற்றிய சிந்தனையிலேயே மூழ்கி யிருந்த என் கண்களைத் திறந்து, மற்றவர்களுடைய சுக துக்கத்தையும் அவள் எனக்கு எடுத்துக் காட்டியது, ஏதோ ஒரு புதிய லோகத்தைக் கண்டதுபோல் என்னைத் திக்பிரமை அடையச் செய்தது. ஆகவே, அவள் சொல்வதை யெல்லாம் நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். வசந்தா அவற்றை யெல்லாம் மிகவும் நிதானமாகத் தாழ்ந்த குரலிலேயே சொன்னாள். அமைதி நிறைந்த அக்குரலோசையே எனக்கு அப்பொழுது பெரு ஆறுதலாக இருந்தது.

இன்று அவள் கூறியது எதையும் நான் மறக்கவே யில்லை. எப்படி மறக்க முடியும்? "கால்தான் நொண்டி, மனம் கூடவா நொண்டி?" என்று அவள் கேட்ட கேள்வி, என் காதில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டே யிருக்கிறது. ஆனால் அவள் கூறியது அவள் விஷயத்திலேயே பலித்து விடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இருந்தாலும் அவள் தன் கணவனின் கால் போனதைப் பற்றி வருந்துவதே யில்லை. அவள் உற்சாகமாக அவருக்குப் பணிவிடை செய்வதைக் கண்டால், அவருடைய அங்கஹீனம்கூட அவளுக்குச் சந்தோஷமளிப்பதாகவே தோன்றும். திருப்தியுடனும் இன்பத்துடனும் தன் வாழ்வை அமைதியாக நடத்த வசந்தா கொண்டிருக்கும் திடசித்தத்தை அந்தப் பிரம்மனால் கூடக் குலைக்க முடியாது போலும்!

அவரைப் பார்த்த நானும், 'ஒரு நொண்டியை மணந்தோமே!' என்று அதற்கப்புறம் வருந்துவதே யில்லை. அவருடைய அன்பிலும், மாமியாருடைய பரிவிலும் என்னையே மறந்தேன். தன் மகனின் இருள் சூழ்ந்த வாழ்வை ஒளியுறச் செய்தேன் என்று அந்தத் தாய்க்கு என்னிடத்தில் எவ்வளவு வாத்சல்யம்!

* * *

"சீதா!" என்று யாரோ மெல்லக் கூப்பிடுவது கேட்டுக் கண்ணைத் திறந்தேன். என் கணவர் என் கையைப் பிடித்துக் கொண்டு, "உடம்புக்கு ஒன்றுமில்லையே!" என்று கேட்டார்.

அதைக் கேட்டுக்கொண்டே வந்த என் மாமியார், "போடா, உடம்பு அவளுக்கு அப்படித்தான் இருக்கும்! சீமந்த முகூர்த்தம் வேறே ஆகியிருக்கு, அவளைச் சாப்பிட விடு!" என்று பிள்ளையை அன்பாகக் கடிந்து கொண்டார்.

என் முகம் நாணத்தால் சிவந்தது. எழுந்து சாப்பிடச் சென்றேன். அப்பொழுது என் கணவரின் முகம் மகிழ்ச்சியினால் மலர்ந்திருப்பதைக் கண்டு நான் தாங்கமுடியாத பெருமை யடைந்தேன்.

# மகோன்னதமான புதிய இசைத்தட்டுகள்!



## ஏ. ஜி. சுப்ரமணியம்

N. 18320
தயை புரிய
(2 பாகங்கள்)
மலயமாருதம்



## மிஸ் என்.ஏ. சுந்தரம்

N. 18321
சதானந்தமே
(2 பாகங்கள்)
கல்யாணி



## நாதஸ்வர வித்வான் திருவெண்காடு பி. சுப்ரமணிய பிள்ளை

N. 18945
ரக்ஷபெட்டரே
(2 பாகங்கள்)
பைரவி




## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"



# பந்தும் பம்பரமும்

விஜயம்

“முத்து, நீ சமர்த்தோ இல்லையோ! சீக்கிரம் தூங்கு!” என்றாள் முத்துவின் அம்மா.

“எனக்குத் தூக்கம் வரவில்லை, அம்மா! நீ ஒரு கதை சொல்லு: கேட்டுக் கொண்டே தூங்கிவிடுகிறேன்!” என்றான் முத்து.

“அப்படியானால் சரி; கேள்!” என்று கூறிவிட்டு, அம்மா கதை சொல்ல ஆரம்பித்தாள்:

“ஒரே ஒரு ஊர்லே ஒரு ராஜா இருந்தான்......!”

“போ, அம்மா! எனக்கு ராஜா கதையே வேண்டாம்!” என்றான் முத்து.

“அப்படியானால் சிங்க ராஜா கதை சொல்லட்டுமா?” என்று கேட்டாள் அம்மா.

“சிங்க ராஜா கதையும் வேண்டாம். கரி, சிங்கம், புலி முதலிய மிருகங்களின் கதையே வேண்டாம். கேட்டுக் கேட்டு எனக்கு அலுத்துப் போய் விட்டது. ஏதாவது புது மாதிரிக் கதையாகச் சொல்லு!”

“சரி, பந்தை நேசித்த பம்பரத்தின் கதையைச் சொல்லட்டுமா?”

“உம்...சொல்லு, அம்மா!” என்றான் முத்து.

அம்மா கதை சொல்ல ஆரம்பித்தாள்:

ஒரு ஊரில் கிட்டு என்று ஒரு பையன் இருந்தான். அவனுக்கு அவன் அப்பா ஒரு பம்பரமும் பந்தும் விளையாடுவதற்கு வாங்கிக் கொடுத்தார்.



கிட்டுவுக்குப் பம்பரமும் பந்தும் இருந்தால் போதும், சாப்பாடே அவனுக்கு அவசியம் இல்லை. பள்ளிக்கூடத்துக்குப் போகும் நேரம் தவிர, அவன் சதா காலமும் பம்பரமோ பந்தோதான் ஆடிக் கொண்டிருப்பான்.

அந்தப் பம்பரம் வர்ண வேலைப்பாடுகளுடன் மிகவும் அழகாயிருந்தது. அதன் உச்சக் தலையில் ஒரு பித்தளை ஆணி திருகப்பட்டிருந்தது. அது பளபள வென்று கண்ணைப் பறித்தது. பம்பரம் சுற்றி வரும்போது வான வில்லின் வர்ண விசித்திரங்கள் அதன் மேல் வட்டமாகத் தோன்றின.

பந்தும் புதிதாக நன்றாய்த்தான் இருந்தது. கிட்டு ஒரு தடவை அந்தப் பந்தைக் கீழே போட்டால், அது ஆனந்தத்துடன் மேலே கிளம்பி உற்சாகத்துடன் பல தடவை குதிக்கும். அதைப் பார்த்து விட்டு, கீழே சுற்றிக் கொண்டிருக்கும் பம்பரம் சந்தோஷம் தாங்க முடியாமல் சிரிக்கும்.

பந்து குதிப்பதைக் காணும்போதெல்லாம் பம்பரத்துக்குப் பந்திடம் பேச வேண்டும், பழக வேண்டும் என்று தோன்றியது. ஆனால் பந்தை நெருங்கிப் பேசுவதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை.

அன்று இரவு கிட்டு சீக்கிரமாகவே தூங்கிவிட்டான். அவன் மேஜை டிராயரில் இருந்த பம்பரம் மெதுவாகப் பக்கத்தில் இருப்பது யார் என்று பார்த்தது. அது நினைத்தபடியே பந்துதான் பக்கத்தில் இருந்தது.

“உன்னோடு நெருங்கிப் பழக வேண்டும், பேச வேண்டும் என்று எவ்வளவோ நாட்களாக ஆசை. இன்

றைக்குத்தான் உன்னைப் பக்கத்தில் இருந்து பார்க்க முடிந்தது. என்னை உனக்குத் தெரிகிறதா?" என்று அன்பு ததும்பக் கேட்டது பம்பரம்.



உடனே பந்து, "யார், பம்பரமா? நீ கேட்பது வேடிக்கையாயிருக்கிறதே, அப்பா! உன்னைத் தெரியாமல் என்ன? பேஷாய்த் தெரியும்! என்ன சமாசாரம், சொல்லு!" என்று கேட்டது.

"ஒன்றுமில்லை. எனக்கு உன்னைச் சிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்று வெகு நாட்களாக ஆசை. உனக்கும் என்னுடன் சிநேகம் செய்து கொண்டு விளையாடப் பிரியம் இருக்கும் என்று நினைக்கிறேன்!" என்று பம்பரம் சொல்லிற்று.

"பேஷ்! நல்ல யோசனை செய்தாய். கிட்டு கை வலிக்கச் சுற்றினால் நீ இருந்த இடத்திலேயே சுற்றுவாய். குண்டுச் சட்டியில் நீ குதிரை ஓட்டுபவன். உன் ஆர்ப்பாட்டம் எல்லாம் தரையிலேதான். நான் வானவீதியிலே சுழன்று வருவேன்; பூமியிலிருந்து ரொம்ப ரொம்ப உயரம் எழும்பிக் குதிப்பேன். உனக்கும் நமக்கும் சரிப்படுமா? எனக்கு ஏற்கெனவே ஒரு வானம்பாடி சிநேகமாயிருக்கிறது. கிட்டு என்னை வைத்துக் கொண்டு விளையாடும் போது நான் எழும்பி எழும்பிக் குதிக்கிறேனல்லவா? அப்போது தோட்டத்து மாமரத்தின் மேல் இருக்கும் வானம்பாடி என்னைப் பார்த்து ஆனந்த கீதம் பாடும். அந்த வானம்பாடியுடன் விளையாடுவதற்கே எனக்கு நேரம் இல்லையே!" என்று பந்து சொல்லிற்று.

பம்பரம் அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. அதற்கு மிகவும் வெட்கமாய்ப் போய்விட்டது.

ஒரு நாள் கிட்டு பந்து விளையாடிக் கொண்டிருந்தபோது, மேலே அதை வீசி யெறிந்தான். அது பிறகு கீழே வரவே யில்லை. கிட்டு விழுந்து விழுந்து அங்கும் இங்கும் தேடினான். பந்து அகப்படுகிற வழியாயில்லை. அவனுக்கு அழுகை வந்து விட்டது. 'ஓ'வென்று அழ ஆரம்பித்து விட்டான். சமையலறையிலிருந்து அம்மா ஓடோடியும் வந்தாள். அவளிடம் விஷயத்தைச் சொன்னான் கிட்டு. இருவருமாகச் சேர்ந்து பந்தைத் தேடு தேடு என்று தேடினார்கள். அது கிடைத்தால்தானே? கடைசியில் அலுத்துப் போய்த் தேடுவதை விட்டுவிட்டார்கள்.

பம்பரம், பந்தை நினைத்து ஏங்கிற்று. ஆனால் என்ன பிரயோஜனம்? பந்து போனது போனதுதான்.

அன்றைக்குக் கிட்டுவின் வீட்டுக்கு ஓடு மாற்றினார்கள். அப்பொழுது கிட்டு சந்தோஷம் தாங்க முடியாமல் 'கீச்' என்று கத்திவிட்டான். காரணம் பல மாதங்களுக்கு முன்பு காணாமற் போன பந்து திடீரென்று கீழே குதித்ததுதான்!

பந்தைக் கண்டதும் பம்பரத்துக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "நீ இத்தனை நாள் எங்கே இருந்தாய்? உன்னை நினைத்து நினைத்து நான் ஏங்கிப் போனேன்!" என்றது.

பந்தின் மனம் இளகியது; அதன் கண்களில் ஜலம் பெருகியது.

"நான் முன்பு உன்னை அவமதித்தேன். அதற்குத் தகுந்த தண்டனையை வெய்யிலிலும் மழையிலும் ஆறு மாதம் ஓட்டின்மேல் இருந்து அனுபவித்தேன். ஆனால் மேலே இருக்கும் போதுதான் உன் அழகை, நீ சுற்றும்போது உண்டாகும் வர்ண ஜாலத்தை என்னால் பார்க்க முடிந்தது. ஆறு மாதத்தில் என் அழகு ரொம்பக் குறைந்து விட்டது. வானம்பாடிக்கும் என் மேல் இருந்த அன்பு மாறி விட்டது. நீதான் மாறாமல் இருக்கிறாய். என்னை மன்னித்து விடு. இனிமேல் நாம் இருவரும் சிநேகிதர்கள்!" என்றது பந்து.

பம்பரத்துக்குச் சந்தோஷத்தினால் தலை சுற்றியது. அன்றைய தினத்திலிருந்து பந்தும் பம்பரமும் பரம சிநேகிதர்களாகி விட்டன.

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா.வீழிநாதன்

## பதினைந்தாம் அத்தியாயம்

## தேநீர் விருந்து

பத்மா இப்பொழுதெல்லாம் முன் போல் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடப்பதில்லை. கடவுள் புண்ணியத்தில் அவளுடைய நகைக் குறை தீர்ந்து விட்டது. அப்புறமும் வீட்டிலேயே அடைந்து கிடப்பதென்றால் மனம் கேட்குமா? ஆடையலங்காரம் என்பது தின்பண்டத்தைப் போன்றதல்லவே, தனியாகச் சுவைத்து ரசிப்பதற்கு! நாலு பேர் பார்த்து 'நன்றாயிருக்கிறது' என்று புகழ்ந்தால்தானே மனதுக்கு ஒரு திருப்தியும் நிம்மதியும் ஏற்படும்! நகைகளை வாங்கிப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைப்பதனால் யாருக்கு என்ன பிரயோசனம்? ஆகவே, அவள் தெருவில் ஏதாவது விசேஷம் என்றால் தன் மாமியாருடன் போய் வரலானாள். கொஞ்ச நாட்கள் சென்றதும், மாமியார் துணைக்கு வர வேண்டும் என்ற அவசியமும் இல்லாமற் போய் விட்டது; தனியாகவே போய் வரலானாள். இன்னும் கொஞ்ச நாட்கள் கழித்ததும், வீட்டில் இருப்புக் கொள்ளவில்லையென்றால் பக்கத்து வீடுகளுக்கு வம்படிக்கப் போய்விடுவாள். அவளுடைய அழகு, ஆடையலங்காரம், பேச்சுச் சாதுரியம் எல்லாம் சேர்ந்து பெண்களிடையே அவளுக்கு ஒரு அலாதி மதிப்பை உண்டு பண்ணி விட்டன. அவள் பேச வரவில்லையென்றால் அவர்களுக்குப் பேச்சு பேச்சாகவே தோன்றாது. அவள் இருந்தால்தான் அவர்களிடையே ஒரு விதக் கலகலப்பு தாண்டவமாடும். அந்தத் தெருப் பெண் பிள்ளைகள் எல்லாரும், தினம் யார் வீட்டிலாவது அரை மணி நேரம் ஒரு மணி நேரம் கூடிப் பேசியோ, பாடியோ பொழுதைப் போக்குவார்கள்.

பங்குனி மாதத்தில் ஸ்ரீ ராம நவமி உற்சவம் வந்தது. அந்தப் பதினைந்து நாட்களும் ஒரே பாட்டும் கூத்துமாக அமர்க்களப் படுத்தி விட்டார்கள். பத்மா வெகு உதார நோக்கத்துடன் பாடகிகளை அழைத்து வரும் வண்டிச் சத்தம், வெற்றிலைப் பாக்குச் செலவு முதலிய சில்லறைச் செலவுகளைத் தானே ஏற்றுக் கொண்டாள். பத்மா சிற்சில சமயம் தன் தோழிகளுடன் கங்கா ஸ்நானம் செய்யப் போவதும் உண்டு. கங்கைக் கரையில் செய்யும் பழம், பாக்குச் செலவு, வண்டிச் சத்தம் முதலியவைகளுக்கும் அவள் பிறர் கையை எதிர்பார்ப்பதில்லை. இந்த அற்பச் செலவுக்கெல்லாம் பிறரைக் கொடுக்கச் சொன்னால் நன்றாயிருக்குமா? ஆகவே அவள் இம்மாதிரிச் செலவையெல்லாம் தானே ஏற்றுக் கொண்டு விடுவாள். தினம் இம்மாதிரி இரண்டு மூன்று ரூபாய்கள் செலவழிந்து விடும். அவள் அதை ஒரு பொருட்டாகவே எண்ணுவதில்லை. ரமாநாத் எப்பொழுதுமே 'பத்மாவின் முகம் கோணாமல் நடந்து கொள்ள வேண்டும்' என்று எண்ணுபவன். அவளுக்காக அவன்

தன் உயிரையே கூடக் கொடுக்கத் தயாராயிருந்தான். ஆகவே இந்த இரண்டு மூன்று ரூபாய்க் காசுக்கு அவன் அஞ்சுவானா? அவள் கேட்கும் பொழுதெல்லாம் வேண்டியதைக் கொடுத்து, அவளை எப்பொழுதுமே மகிழ்ச்சியாக வைத்திருந்தான். தினசரி பத்மாவும் அவனிடத்தில் வந்து, பெண்களிடையே தனக்கு இருக்கும் மதிப்பைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்ளுவாள். அவனும் தன் மனைவிக்கு ஏற்பட்டிருக்கும் பெருமையை எண்ணி மனம் பூரித்துப் போவான்.

ஒரு நாள் அவளுடைய சிநேகிதிகளுக்கு சினிமாவுக்குப் போக வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. அன்று எல்லாருமாகப் போய்ப் பார்த்து வந்தனர். அது முதல் எல்லாருக்கும் சினிமாப் பைத்தியமே பிடித்து விட்டது. அடிக்கடி சினிமா பார்க்கப் போகலாயினர். ரமாநாத்துக்கு முன்பெல்லாம் அவ்வளவாக சினிமாவில் ஆசை விழவில்லை; ஆசை இருந்தாலும் சினிமாவுக்குப் போகக் கையில் காசு வேண்டாமா? ஆகையால் அவன் அப்பொழுதெல்லாம் சினிமாவைப் பற்றிச் சிந்தித்ததேயில்லை. இப்பொழுதோ அவனுக்குக் கையில் காசு வர ஆரம்பித்து விட்டது. போதாக் குறைக்குப் பத்மா வேறு பிடிவாதம் பிடித்துக் கூப்பிட ஆரம்பித்து விட்டாள். ஆகவே அவனாலும் சினிமாவுக்குப் போகாமல் இருக்க முடியவில்லை. சினிமா தியேட்டரில் எத்தனையோ பெண்கள் சங்கோசத்தை விட்டுத் தன் கணவன்மார்களுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர். அதைக் கண்ணுற்ற பத்மாவுக்கும் உள்ளூற, 'தனக்கும் இதுமாதிரி சுதந்திரம் கிட்டக் கூடாதா?' என்ற ஆசை உதித்தது. அவள் வீட்டிலிருந்து புறப்படும்பொழுது, 'தானும் தன் கணவனுடன் உட்காருவது' என்ற திடசங்கல்பத்துடன்தான் புறப்படுவாள். ஆனால் சங்கோசம் குறுக்கிட்டு அவளைப் பெண்களின் பிரத்தியேகமான இடத்தில் கொண்டு போய் உட்கார வைத்து விடும். 'கணவனின் பக்கத்தில் உட்காராமல் இப்படித் தன்னந் தனியே வந்து உட்கார்ந்து விட்டோமே' என்று பிறகு அவளுடைய மனம் ஏங்கும். அந்த நாகரிகப் பெண்களைவிட அவள் எந்த விஷயத்தில் குறைந்து விட்டாள்? அழகுக்குக் குறைவா? ஆடை அலங்காரத்துக்குக் குறைவா? பேச்சுக்குத்தான் குறைவா? அப்படியிருக்கும்பொழுது அவள் மட்டும் ஏன் பெண்களுடன் போய்த் தனியாக உட்கார வேண்டும்?

ரமாநாத் அதிகம் படிக்கா விட்டாலும், தேச, கால வர்த்தமானத்தை அனுசரிக்கத் தெரியாதவன் அல்ல. முன்பெல்லாம் அவன் தன் தாயாரைக் கங்கா ஸ்நானத்துக்கு அழைத்துப் போவதுண்டு. ஆனால் அப்பொழுதெல்லாம் அவன் தாயார் புரோகிதர்களுடன் வாய் திறந்து பேசக் கூடாது. பேசினால் சீறி விழுவான். வீட்டுக்குள்ளே தாயாரின் சிரிப்புக் குரல் சற்று உரக்கக் கேட்டு விட்டால் போதும்; உள்ளே போய், 'உனக்கு மானம், வெட்கம் இல்லையா, அம்மா? திண்ணையில் இத்தனை ஆண்பிள்ளைகள் உட்கார்ந்திருக்கும்பொழுது இப்படிச் சிரிக்கிறாயே!' என்று கடிந்து கொள்ளுவான். தாயார் வெட்கித் தலை குனிந்து விடுவாள். ஆனால் இப்பொழுது காலத்துக்குத் தக்கவாறு ரமாநாத்தின் பழைய கர்நாடகப் பழக்க வழக்கங்கள் எல்லாம் மாறிவிட்டன. அத்துடன் பத்மாவின் ரூபலாவண்யமும் சேர்ந்து அவனுடைய எண்ணங்களை அடக்கி விட்டது. பத்மா அழகில்லாதவளாகவும், பட்டிக்காட்டுப் பெண்ணாகவும், கணவனுடன் நாகரிகமாகப் பழகத் தெரியாதவளாகவும் இருந்திருந்தால் அவளையும் அவன் வீட்டுக்குள்ளேயே உட்கார வைத்திருப்பான். அவளைப் பின்னோடு உலாவக் கூப்பிட்டுக் கொண்டு போவதென்றாலே அவனுக்கு வெட்கமாயிருந்திருக்கும். ஆனால் பத்மாவைப் போன்ற அழகியுடன் உலாவப்போவதென்றால், அதில் ஒரு தனி ஆனந்தமும் கௌரவமும் அல்லவா இருக்கிறது! அந்த ஊரில் பத்மாவைப் போன்ற அழகி ஒருத்திகூட இல்லை; யாருக்கும் அவளைப்போல அலங்காரம் செய்து கொள்ளவும் தெரியவில்லை. பத்மா நாட்டுப்புறத்தில் பிறந்து வளர்ந்திருந்தும் கூட, நகரத்திலேயே பிறந்து வளர்ந்தவள் போல் தன்னை மாற்றிக் கொண்டு விட்டாள். அவளுக்கு ஆங்கிலக் கல்வியில்லையே என்ற ஒரே ஒரு குறைதான். அதையும் ரமாநாத் தானே தீர்த்திக்க முயன்றான்.

ஆனால் அந்தக் கர்நாடகக் கட்டுப்பாட்டை எப்படித் தகர்த்தெறிவது? சினிமாத் தியேட்டரில் எத்தனையோ சிநேகிதர்கள், தெரிந்தவர்கள் வந்திருப்பார்கள். அவன் பத்மாவுடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டால் அவர்கள் சிரிக்க மாட்டார்களா? கடைசியில் ஒரு நாள் அவன் தைரியமாக

அந்த சமூகத்தைச் சிறிதும் பொருட் படுத்துவதில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டான். "பத்மா, இன்று நீயும் நானும் தியேட்டரில் சேர்ந்தே உட்காருவோம்!" என்றான் ரமாநாத்.

பத்மாவுக்கு உள்ளூற ஆனந்தம்தான். ஆனாலும், "நிஜமாகவா? வேண்டாம், சிநேகிதர்கள் பரிகாசம் செய்து பிராணனையே வாங்கி விடுவார்கள்!" என்றாள்.

"அதற்கெல்லாம் பயந்தால் கட்டி வருமா? பேசாமல் நான் சொல்வதைக் கேள்" என்று சொல்லி, பத்மாவை மெதுவாகச் சம்மதிக்கச் செய்து விட்டான் ரமாநாத்.

முதல் நாள் இருவருக்குமே சேர்ந்து உட்காருவதற்குக் கொஞ்சம் சங்கோசமாகத்தான் இருந்தது. ஆனால் சில நாட்களுள் தானாகவே அந்தச் சங்கோசம் மறைந்து விட்டது. அதற்குப் பின்னர் ரமாநாத்தும் பத்மாவும் சேர்ந்து 'பார்க்'குக்குக் கூடப் போய் வரலாயினர்.

"ஆமாம், அப்பா நம்மைப் பார்த்து விட்டால் என்ன செய்வது?" என்று முதலில் பத்மா ஆட்சேபித்தாள்.

"பார்த்தால் என்ன?"

"பார்த்தால் என்னவா! வெட்கமாயிராதா?"

"அதெல்லாம் ஒன்றும் இராது. நாம் இரண்டு பேரும் இப்படிப் 'பார்க்'குக்கு வருகிறோம் என்று தெரிந்தால் அவரே இந்தப் பக்கம் வருவதை நிறுத்திக்கொண்டு விடுவார்!"

"அம்மா பார்த்து விட்டால்...?"

"அம்மாவுக்கு என்ன பயம்? அதெல்லாம் அவளைப் பேச்சில் ஒரே மடக்காக மடக்கி விடலாம். அதற்காக நீ கவலைப் படாதே!" என்றான் ரமாநாத்.

பத்துப் பதினைந்து தினங்களுக்குள்ளேயே, பத்மாவுக்கு அந்தப் புதிய மாதர் சமூகத்தில் ஒரு தனி இடமே கிடைத்து விட்டது. நல்ல பேச்சு வன்மை படைத்த ஒரு பிரசங்கி, முதன் முதலில் புதிதாக மேடையேறிப் பிரசங்கம் செய்ய வருவது போலத்தான் பத்மா அந்த மாதர் சமூகத்தில் பிரவேசித்தாள். புதுப் பிரசங்கியின் பேச்சு வன்மை, அவனை அலட்சியம் செய்ய நினைக்கும் பெரிய பெரிய வித்வான்களைக் கூட மயக்கித் தலை வணங்கும்படி செய்து விடுகிறதல்லவா? அதேபோலப் பத்மாவின் அழகு, தற்பெருமை, பகட்டு, பேச்சுச் சாதுரியம் எல்லாம் சேர்ந்து, அவளை உயர்ந்த ஸ்தானத்தில் அமர்த்தி விட்டன. முதல் நாளே ஒருத்தி தன் வீட்டுக்குத் தேநீர் அருந்த வரும்படி அவளை அழைத்தாள். பத்மாவும் வேண்டா விருப்பாக அதை ஒத்துக்கொண்டு விட்டாள்.

அன்று இருவரும் வீடு திரும்பும்பொழுது ரமாநாத் கவலை தோய்ந்த குரலில் "அப்படியானால் நாம் அந்தத் தேநீர் விருந்துக்குக் கட்டாயம் போய்த்தான் ஆக வேண்டுமா?" என்று கேட்டான்.

"என்ன செய்வது? மறுதளிக்க முடியவில்லையே!" என்றாள் பத்மா.

"அப்படியானால் நாளைக் காலையில் உனக்கு ஒரு நல்ல புடவையாக வாங்கிக் கொண்டு வரட்டுமா?"

"இருக்கிற புடவை போதாதா? சிறிது நேரத்துக்காக ஐம்பது, அறுபது ரூபாயைப் புடவையில் கொண்டு போய்ப் போடுவானேன்?"

"அவள் கட்டிக் கொண்டிருந்த புடவையைப் பார்த்தாயோ, இல்லையோ? அது மாதிரி உன்னிடம் புடவை ஏது? நல்ல புடவையாக ஒன்று வாங்கிக்கொண்டே வந்து விடுகிறேன்" என்றான் ரமாநாத்.

"எனக்கு வர ஒழியாது என்று அப்பொழுதே நான் சொல்லியிருக்க வேண்டும்! அசட்டுத்தனமாக ஒத்துக் கொண்டு விட்டேன்!" என்று பத்மா வருத்தத்துடன் சொன்னாள்.

"நாமும் அவளுக்கு ஒரு விருந்து வைத்தாக வேண்டும். இல்லாவிட்டால் நன்றாயிராது!" என்றான் ரமாநாத்.

"எப்படியோ வீண் தொல்லையை விலைக்கு வாங்கிக் கொண்டாகி விட்டது!"

"கஷ்டம் ஒன்றும் இல்லை, நம் வீடு நன்றாயில்லையே என்றுதான் யோசிக்கிறேன். மேஜை, நாற்காலிக் கெல்லாம் ரமேஷ் பாபுவிடம் சொல்லி ஏற்பாடு செய்து விடலாம். சிரமம் ஒன்றும் இல்லை. வீட்டுக்குத்தான்......" என்றான் ரமாநாத்.

"ஆமாம், நாமும் விருந்து வைக்க வேண்டும் என்பது கட்டாயமா, என்ன?" என்று கேட்டாள் பத்மா.

ரமாநாத் அவளுடைய அசட்டுக் கேள்விக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. பத்மாவுக்காகப் பாதரட்சை, கைக்கடிகாரம் இரண்டும் வாங்கவேண்டும் என்ற கவலை வேறு அவனைப் பிடித்தது. அவனிடமோ தம்பிடிக் காசுகூட இல்லை. செலவோ

நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. இதுவரையில் ஒரு தம்பிடிகூட நகைக் கடைக்காரனுக்குக் கொடுத்தாகவில்லை. கங்காராம் இரண்டொரு தடவை ஜாடை மாடையாகப் பணம் வேறு கேட்டனுப்பினான். இருந்தாலும் பத்மாவை மிகவும் கேவலமான நிலைமையில் விருந்துக்கு அழைத்துப் போக அவனுக்கு மனம் வரவில்லை. 'அந்த விருந்தில் எவ்வளவோ பேர் விதவிதமாக அலங்காரங்கள் செய்து கொண்டு வருவார்கள். பத்மா ஆடையாபரணங்கள் இல்லாமலேயே மற்றவர்களைக் காட்டிலும் அழகாகத்தான் இருக்கிறாள். இருந்தாலும் ஒரு இடத்துக்குப் போகும்பொழுது கொஞ்சமாவது நாகரிகமாகப் போக வேண்டாமா? நாம் போன ஜன்மத்தில் செய்த பூஜா பலன்தான் நமக்குப் பத்மாவைப் போன்ற அழகி மனைவியாக வாய்த்திருக்கிறாள். அவள் மனம் கோணாமல் நடந்து கொள்ள வேண்டியது நம் கடமை. வாழ்வு எதற்கு? உண்ணவும், உடுக்கவும், ஆனந்தமாய்ப் பொழுது போக்குவதற்கும்தானே! யௌவன காலத்தில் சுகம் அனுபவிக்காமல் வயது வந்த காலத்திலா சுகம் அனுபவிக்கப் போகிறோம்? கிழப் பருவத்தில் பணத்தைச் சேர்த்து வைத்து என்ன பிரயோசனம்? யௌவனம் கழிந்த பிறகு கல்யாணம் செய்து கொண்டுதான் என்ன பிரயோசனம்? அனுபவிக்க வேண்டிய சுகத்தைக் காலாகாலத்தில் அனுபவிக்க வேண்டும். ஆகையால் பத்மாவுக்குப் புடவையும் கைக் கடிகாரமும் வாங்க வேண்டியது அவசியம்தான்!' என்ற முடிவுக்கு ரமாநாத் வந்து விட்டான். மறு நாள் பொழுது விடிந்ததும் இரண்டு சாமான்களையும் வாங்கிக்கொண்டு வந்து விட்டுத்தான் மறுகாரியம் பார்த்தான்.

பத்மா சற்று எரிச்சலுடன், "நான்தான் இதெல்லாம் 'வேண்டாம், வேண்டாம்' என்று முட்டிக் கொண்டேனே! எதற்காக வாங்கி வந்தீர்களாம்? நூற்றைம்பது ரூபாய்க்குக் குறையாதுபோலிருக்கிறதே!" என்றாள்.

"நூற்றைம்பதா? நான் அப்படியெல்லாம் வீண் செலவு செய்துவிடுவேன் என்று எண்ணிவிட்டாயா?" என்றான் ரமாநாத்.

"நூற்றைம்பதுக்குக் குறையவே குறையாது" என்று சொல்லியவாறு, பத்மா கடிகாரத்தை எடுத்துக் கையில் கட்டிக் கொண்டாள். பிறகு மந்திரவசப் பட்டவள் போலப் புடவையை எடுத்துப் பிரித்துப் பார்க்கலானாள்.

"உன் கைக்கு இந்தக் கடிகாரம் எவ்வளவு அழகாயிருக்கிறது, தெரியுமா?" என்றான் ரமாநாத்.

"அதிருக்கட்டும், எவ்வளவு ரூபாய் ஆயிற்று? நிஜத்தைச் சொல்லுங்கள்!" என்றாள் பத்மா.

"மொத்தம் நூற்றுமுப்பத்தைந்து ரூபாய்தான்!" என்றான் ரமாநாத்.

"நான் சொன்னதை விடப் பதினைந்து ரூபாய்தானே குறைச்சல்! ஆனால் இந்தக் கடனை எப்படி அடைப்பது? அவர் என்னை எதற்காகத்தான் இப்படித் தேநீர் விருந்துக்கு அழைத்துத் தொலைத்தாரோ? இனிமேல் நான் வெளியிலேயே போகப் போவதில்லை!" என்றாள் பத்மா.

ரமாநாத்துக்கு அந்தக் கடன் கவலையில்லாமல் போகவில்லை. இருந்தாலும் அவளுடைய மகிழ்ச்சிக்குக் குந்தகம் விளைவிக்க அவன் விரும்பவில்லை. ஆகையால், "கடன் எல்லாம் தீர்ந்து விடும். நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே!" என்றான்.



பத்மா அவனை சிந்திக்கும் பாவனையில், "நீராவது, மண்ணாவது! உங்கள் சம்பளத்தில் இதுவரை ஒரு தம்பிடியாவது மிகுந்திருக்கிறதா, சொல்லுங்கள். அப்பா வீட்டுச் செலவைக் கவனித்துக் கொண்டு விடுகிறார். இல்லாவிட்டால் நீங்கள் படும்பாடு தெரியும். எனக்கு இந்த நகையும் புடவையும் வேண்டாம். சொல்லுவதைக் கேளுங்கள். திருப்பிக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வந்து விடுங்கள்" என்றாள்.

ரமாகாந் அன்பு ததும்பும் குரலில், "இதைமட்டும் வைத்துக் கொண்டு விடு. இனிமேல் வாங்குவதாயிருந்தால் உன்னைக் கேட்காமல் வாங்கமாட்டேன்" என்றான்.

அன்று சாயந்திரம் புதுப் புடவையைக் கட்டிக் கொண்டு, கால்களில் செருப்பையும் கையில் கடிகாரத்தையும் கட்டிக் கொண்டு, பத்மா நிலைக் கண்ணாடிக் கெதிரில் போய்த் தன் அழகில் தானே மயங்கி அசையாமல் நின்றாள். ஒரு வேளை அன்று காலையில் அவன் வாங்கி வந்தவற்றை 'திருப்பிக் கொடுங்கள்' என்று உண்மையான மனத்துடன் சொன்னாளோ, என்னவோ! இப்பொழுது அவளுக்கு அவைகளைத் தியாகம் செய்யக் கொஞ்சமும் மனம் வரவில்லை!

சிறிது நேரத்திற்குப் பிறகு பத்மாவும் ரமாகாந்தும் தேநீர் விருந்துக்குப் புறப்பட்டனர். விருந்துக்கு அழைத்திருந்தவள் பங்களாவின் பெயரை மட்டும் சொல்லியிருந்தாள். அந்தப் பங்களாவும் வெகு சுலபமாகக் கண்டு பிடிக்கப்பட்டு விட்டது. வாசலில் 'பண்டித இந்து பூஷண், அட்வகேட், ஹைகோர்ட்' என்று போர்டு மாட்டப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் ரமாகாந், விருந்துக்கு அழைத்திருப்பவள் பண்டித இந்துபூஷணின் மனைவியாகத் தான் இருக்க வேண்டும் என்பதை ஊகித்தறிந்து கொண்டான். பண்டித இந்து பூஷண் மிகவும் பிரசித்தி பெற்ற வக்கீல். ரமாகாந் அவரை எத்தனையோ தடவை பார்த்திருக்கிறான். ஆனால் இவ்வளவு பிரபலஸ்தருடன் தனக்கு அறிமுகம் கிட்டக் கூடும் என்று அவன் கனவில்கூடக் கருதியதில்லை. அந்த நடக்க முடியாத காரியம் பத்மாவின் மூலம் நடந்து விட்டது. அந்தப் பெரிய மனிதரின் வீட்டுக்கே தேநீர் அருந்த வரும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்து விட்டது.



தேநீர் விருந்துக்கு அநேகர் அழைக்கப் பட்டிருப்பார்கள் என்று ரமாகாந் எண்ணியிருந்தான். ஆனால் அவருடைய வீட்டில் அவரையும் அவருடைய மனைவி ரத்தனையும் தவிர வேறு யாருமே யில்லை. ரத்தன் அவர்களிருவரையும் பார்த்ததும் எழுந்து வெளியில் வந்து, அவர்களை உள்ளே அழைத்து வந்து, தன் கணவருக்கு அறிமுகம் செய்து வைத்தாள். பண்டித இந்து பூஷண் சாய்வு

நாற்காலியில் படுத்தபடியே அவர்களை வரவேற்று உபசரித்த வண்ணம், "மன்னிக்க வேண்டும், எனக்கு உடம்பு சரியில்லை. ஆமாம், நீங்கள் ஏதாவது ஆபீஸில் இருக்கிறீர்களா, என்ன?" என்று விசாரித்தார்.

ரமாநாத் சற்று வெட்கத்துடன், "ஆமாம், முனிஸிபாலிடியில் இருக்கிறேன். இப்பொழுதுதான் சேர்ந்தேன். சட்டம் படிக்கலாம் என்றுதான் எண்ணியிருந்தேன். புது வக்கீல்கள் படும் அவஸ்தையைப் பார்த்து 'வேண்டாம்' என்று விட்டுவிட்டேன்" என்றான்.

ரமாநாத் தன் மதிப்பை ஓரளவு உயர்த்திக்கொள்ள எண்ணி ஒரு சிறு பொய் சொல்லுவதை உசிதமற்றதாக நினைக்கவில்லை. அவன், 'நான் இருபத்தைந்து ரூபாய் சம்பளம் வாங்கும் ஒரு சாதாரண குமாஸ்தா' என்று சொல்லியிருந்தால், ஒருவேளை அவனுடன் வக்கீல் முகம் கொடுத்துக் கூடப் பேசியிருக்க மாட்டார்!

"நீங்கள் செய்தது தான் ரொம்ப சரி. எங்கேயாவது இரண்டு மூன்று வருஷத்துக்குள் உங்களுக்கு நல்ல இடம் கிடைத்து விடலாம். இங்கேயோ பத்து வருஷம் இருந்தாலும் உங்களுக்கு ஒரு நல்ல 'கேஸ்' கூட அகப்படாமலே இருந்துவிடக்கூடும்" என்றார் வக்கீல்.

பத்மாவுக்கு 'ரத்தன், வக்கீலின் பெண்ணா அல்லது மனைவியா?' என்ற சந்தேகம் இன்னும் தீர்ந்தபாடில்லை. ஏனென்றால் வக்கீலுக்கு அறுபது வயதுக்குக் குறைவாயிராது. தலை வழுக்கை விழ ஆரம்பித்து விட்டது. நெற்றியிலும் கன்னங்களிலும் சுருக்கமும் மடிப்பும் விழ ஆரம்பித்து விட்டன. 'பிரயாணி உலக யாத்திரை செய்து களைத்து விட்டான்' என்பதைக் காட்டுவது போலிருந்தது அவருடைய உடல் நிலை. வருஷக் கணக்காக வியாதியால் பிடிக்கப்பட்டவர் போல் அவர் சாய்வு நாற்காலியில் படுத்தவாறு இருந்தார். நல்ல சிவப்பு நிறம்; அறுபது வருஷத்து உஷ்ணத்தையும் குளிரையும் பார்த்த பிறகுகூட நிறம் மங்கவில்லை. நீண்ட மூக்கு; மேடிட்ட நெற்றி; பெரிய பெரிய கண்கள்; அவற்றில் ஒருவிதக் காம்பீர்யம் ததும்பி நின்றது. 'அவருக்குப் பிறருடன் அதிகம் பேசவோ, பதில் சொல்லவோ பிடிக்கவில்லை' என்பது அவருடைய முக பாவத்திலிருந்தே தெளிவாகத் தெரிந்தது. அவருக்கு நேர் விரோத சுபாவம் படைத்தவன் ரத்தன். மாநிறம்; கலகலப்பாகப் பேசும் இனிய சுபாவம்; சப்பட்டையான மூக்கு; உருண்டையான முகம்; சின்னஞ் சிறிய கண்கள்; பார்ப்பதற்குச் சுறுசுறுப்பாயுள்ளவள். பத்மாவின் அழகுக்கும் அவளுடைய அழகுக்கும் எணி வைத்தால்கூட எட்டாது தான்; இருந்தாலும் அவளைக் 'குரூபி' என்று சொல்லி விடுவதற்கில்லை.

நடுவில் உள்ள பெரிய ஹாலில் இரண்டு மேஜைகள் போட்டிருந்தன. அவற்றின் மீது பழங்கள், பிஸ்கத்துக்கள், தேநீர், தண்ணீர் முதலியவை வெகு அழகாக வைக்கப்பட்டிருந்தன. ஒரு மேஜைக் கருகில் ரத்தனும் பத்மாவும் உட்கார்ந்து கொண்டனர். மற்றொரு மேஜைக்கருகில் ரமாநாத் போய் உட்கார்ந்து விட்டான். ஆனால் வக்கீல் மட்டும் சாய்வு நாற்காலியில் படுத்தபடியே கிடந்தார்.

ரமாநாத் அவரைப் பார்த்துச் சிரித்தவாறு, "நீங்களும் வாருங்களேன்!" என்று அழைத்தான்.

வக்கீல் படுத்தவாறே, "நீங்கள் சாப்பிட ஆரம்பியுங்கள். நான் இதோ வந்துவிடுகிறேன்!" என்றார். (தொடரும்)



"பகீரதன்" திருமணம்

★

✳ "கல்கி" உதவி ஆசிரியர் ஸ்ரீ கே. மகாலிங்கத்துக்கும் ("பகீரதன்") பிரெஞ்சு இந்திய சட்டசபை அங்கத்தினர் ஸ்ரீ டி. மாதவன் அவர்களுடைய மைத்துனி சௌ. சரோஜாவுக்கும் சென்ற ஜூன் மாதம் 25-ம் தேதி மாயவரத்தில் சிறப்பாக விவாகம் நடைபெற்றது. நண்பர்களும் முக்கிய பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்திருந்தார்கள். மணமக்களுக்கு இந்தியாவின் பல பாகங்களிலிருந்து ஏராளமான வாழ்த்துத் தந்திகளும் பரிசுகளும் வந்து குவிந்தன. வாழ்க, சரோஜா — மகாலிங்கம்! ✳

*ஜயஸ்ரீ: மங்கையர்க்கரசி
நிர்மலமான முகமண்டலம்..

# என்னே *அவளது எழில்! அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்!

...நீங்களும் பாண்ட்ஸ் உபயோகித்து உங்கள் வதனத்தை புதுமலர் காந்தி பொங்க விளங்கச் செய்து வருகிறீர்களா? எவ்விலையிலுமுள்ள வேறெந்த முக க்ரீம்களையும் விட பாண்ட்ஸையே எழில் படைத்தவர்கள், சிறுமியர்கள் அதிகமாக உபயோகிக்கின்றனர். உங்கள் சருமத்திற்கு உங்களால் முடியும் மிக முக்கியமான பாராமரிப்பு அதை செம்மையாகச் சுத்தம் செய்வதேயென்பது ஞாபகமிருக்கட்டும். இன்றையிலிருந்தே பாண்ட்ஸ் உபயோகிக்கத் தொடங்குங்கள்.

## பாண்ட்ஸ் இணைமுறை




**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** தினம் இரண்டுவேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் களையவும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினை மறைக்கிறது - சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.



**பாண்ட்ஸ் பௌடர்:** பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் புஷ்பம்போன்று யௌவன காந்தியுடன் விளங்கும்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

வியாபார விவரங்களுக்கு: எல. டி. ஸேய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - கராச்சி - சென்னை.

வாழ்க்கையின் இனிமையில் இயற்கையாகப் பற்றுடைய பார்சிகள் பிரதி தினமும் தேனீர் அருந்துவதை அவசியமாகவே கருதுகிருர்கள்.

புதுமையிலும் மணத்திலும் நிகரற்ற ப்ரூக் பாண்ட் தேயிலை ஒவ்வொரு பார்சியின் இல்லத்திலும் முக்கிய ஸ்தானம் பெற்றிருப்பதில் ஆச்சரியமில்லையல்லவா?






# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"




"ஆரோக்கியத்திற்கு
உட்புற சுத்தமே முதலாவது!"




வெளிப்புற சுத்தத்தின் முக்கியத்தைப் பற்றி எடுத்துச் சொல்லுவது அனாவசியம். ஏனெனில், இயற்கையிலேயே, நேரான வழியில் அது வழக்கத்தில் வந்துவிட்டது. எப்படியானாலும் உடலின் உட்பாகத்தை சுத்தமாக வைத்திருப்பது அதைவிட மிக முக்கியமானது. அதாவது மலச்சிக்கலுக்குக் காரணமான எல்லாவிதமான மஷ்டுகளையும் அகற்றுதல். தினசரி வயிற்று அவதிகளிலிருந்து விடுதலை பெறுதல். இஷ்டப்படும்போது, ஒரு டம்ளர் நுரையுடன் பொங்கும் ஆண்ட்ரூஸை அருந்த அது கச்சிதமாக உட்புறத்தைக் கழுவி ஆரோக்கியமான பாதையில் திருப்புகிறது. ஆண்ட்ரூஸ் செய்யும் ஆரோக்கியத்திற்கான வேலைகளைப் படித்துப் பாருங்கள்.

முதலில் : ஆண்ட்ரூஸ் வாயையும் நாக்கையும் சுத்தப்படுத்தி கச்சிதமாக்குகிறது.

அடுத்தபடி : ஆண்ட்ரூஸ் வயிற்றை சமப்படுத்தி புளிப்பு நீரை திருத்துகிறது.

பிறகு : ஆண்ட்ரூஸ் ஈரலை செம்மையாக்கி உப்புசத்தைப் போக்குகிறது.

கடைசியாக : உட்புற சுத்தத்தை செய்து முடிக்க, ஆண்ட்ரூஸ் மெதுவாக வயிற்றை சுத்திகரிக்கிறது. அது அவதிப்படுத்தும் விஷங்களை அப்புறப்படுத்தி, மலச் சிக்கலைப் போக்கி, ரத்தத்தை குணப்படுத்தி குளிர்ச்சியாக்குகிறது.

"டின்களிலும் கார்டன்களிலும் பாக் செய்யப்பட்டு எங்கும் புது ஸ்டாக்குகள் இருக்கின்றன."

# ANDREWS

## ஆண்ட்ரூஸ் லிவர் ஸால்ட்

106

குளிர்ச்சியூட்டுகிறது - களைப்பாற்றுகிறது — ஊக்கமூட்டுகிறது

# சேதுவின் யோகம்

ஏ. ஆர்.

"திடீரென்று லாட்டரியில் ஒரு லக்ஷம் ரூபாய் விழுந்துவிட்டால் அதை என்ன செய்வீர்கள்?" என்று உங்களைக் கேட்டால் நீங்கள் என்ன பதில் சொல்வீர்கள்? ஒரு நிமிஷம் திடுக்கிட்டுப் பேந்தப் பேந்த விழிப்பீர்கள். காரணம் நீங்கள் அதைப் பற்றி சிந்தித்திருக்கவே மாட்டீர்கள். "நமக்காவது, லாட்டரியில் ஒரு லக்ஷம் ரூபாய் விழுவாவது!" என்றுதான் நினைத்துக் கொண்டிருப்பீர்கள்.

ஆனால் இதே கேள்வியை எங்கள் அடுத்த வீட்டுச் சேதுவிடம் போட்டுப் பாருங்கள். கேள்வியைப் போட்டவுடன் உங்களைப் போல் அவன் ஸ்தம்பித்துப் போய்விட மாட்டான். அதற்குப் பதிலாக உங்களை ஸ்தம்பிக்க வைத்துவிடுவான். அதாவது, உடனே உங்களிடம் அந்த ஒரு லக்ஷம் ரூபாய்க்கும் ஒரு பட்ஜட் கொடுத்து விடுவான். அந்த பட்ஜட்டைப் பார்த்துவிட்டு நீங்கள் ஸ்தம்பிக்காமல் இருக்கவே முடியாது. அந்த மாதிரி அவன் பட்ஜட் கொடுப்பதற்குக் காரணம் அவனுடைய முன் ஜாக்கிரதைதான்!

"அதிர்ஷ்டம் வரும்பொழுது உங்களிடம் சொல்லிக் கொண்டா வரும்? அது யாரை எந்த நிமிஷத்தில் வந்து தாக்கும் என்று சொல்வதற்கில்லை. அது நம்மையும் வந்து தாக்காது என்பது என்ன நிச்சயம்? ஆகையால் நாம் எதற்கும் முன் ஜாக்கிரதையாகத்தான் இருக்க வேண்டும். அதாவது, அதற்குத் தயாராக பட்ஜட் போட்டு வைத்திருக்க வேண்டும்!" என்பதுதான் அவன் சித்தாந்தம்.



லக்ஷம் ரூபாய்க்கு மட்டும்தான் அவன் பட்ஜட் போட்டு வைத்திருப்பான் என்று எண்ணிவிடாதீர்கள். "நூறு ரூபாய் விழுந்தால் அதை என்ன செய்வாய்?" என்று கேட்டுப் பாருங்கள்; அதற்கும் ஒரு பட்ஜட் தயாராய் வைத்திருப்பான். "ஆயிரம் ரூபாய் விழுந்தால்?"—இதோ அதற்கும் ஒரு பட்ஜட்! இந்தமாதிரி தொகைக்குத் தகுந்தபடி விதவிதமான பட்ஜட் எப்பொழுதும் அவனிடம் தயாராகவேயிருக்கும்!

இப்படியும் ஒரு பிரகிருதி உண்டா என்று நீங்கள் கேலி செய்வீர்கள். ஆனால் உங்கள் எல்லோரையும் பார்த்து அவன் கேலி செய்து கொண்டிருக்கிறான்.

"இப்படித்தான் அஜாக்கிரதையாக இருக்கிறது; திடீரென்று அதிர்ஷ்ட தேவதை தன் கடைக்கண் வீச்சை வீசி விடும். அப்புறம் அவர்கள் படும் அவஸ்தையைப் பார்க்கச் சகிக்காது. 'ஹார்ட் வீக்' பேர்வழியா யிருந்தால் கேட்கவே வேண்டாம். விஷயத்தைக் கேட்ட மாத்திரத்தில் 'ஹா! லக்ஷம் ரூபாயா! எனக்கா?' என்று உயிரைவிட வேண்டியது. எதற்கும் முன் எச்சரிக்கையாக ஒரு பட்ஜட் போட்டு வைத்து விட்டால் இப்படி உயிரை விட வேண்டிய அவசியம் இல்லை, பாருங்கள்!" என்கிறான் அவன்.

பொழுது போகாத நேரங்களில் சேதுதான் எனக்குச் சமய சஞ்சீவி. "என்னடா, சேது!" என்று எங்கள் வீட்டுத் திண்ணையில் இருந்தபடியே ஒரு குரல் கொடுக்க வேண்டியதுதான். உடனே "கேட்டீர்களா, சேதியை? பெங்களூரில் ஒரு ஹெட் கான்ஸ்டபிள் ஆறு லக்ஷம் ரூபாய் தட்டிவிட்டான். அடித்தாலும் அப்படி யல்லவா அடிக்க வேண்டும்!" என்று சொல்லிக்கொண்டு வருவான்.

"அது சரிதாண்டா! உனக்கு ஒன்றையும் காணோமே? எதற்காவது பணம் கட்டி வைத்திருக்கிறாயா?" என்பேன்.

"ஒன்றுக்கும் இல்லை!" என்று கையை விரிப்பான்.

"சும்மா யிருந்தால் என்னடா அர்த்தம்? எதற்காவது பணத்தைக் கட்டி வைத்தால் அல்லவா எதாவது விழும்?"

"கண்டதற்கெல்லாம் கட்டிக் கொண்டிருப்பதா, என்ன?"

"அப்படிச் சொல்லாதேடா! 'விழாது' என்று எப்படிச் சொல்ல முடியும்? உன் அதிர்ஷ்டத்திற்கு......" என்று சொல்லி முடிப்பதற்குள், அவன் தன் ஜேபியிலிருந்து ஒரு காகிதக் கத்தையை எடுத்து வெளியில் போட்டு, "இதில் பாருங்கள், நான் குறித்து வைத்த நம்பர் எங்கேயாவது இருக்கா வென்று?" என்று கல்கத்தா லாட்டரி முடிவு, பூனா ரேஸ் முடிவு போன்ற முடிவுத் தாள்களைக் கொடுப்பான்.

அவற்றில் அவன் குறித்து வைத்திருக்கும் நம்பர் ஒன்றுகூட வந்திருக்காது.

"அட, தேவலையே! இதற்கெல்லாம் விழாதென்று தெரிந்துதான் நீ பணம் கட்டாமல் இருந்திருக்கிறாய்! என்ன இருந்தாலும் நீ புத்திசாலி, அப்பா!" என்று சொல்லி, நான் அவன் முதுகில் இரண்டு ஷொட்டுக் கொடுப்பேன்.

அவ்வளவுதான்; சந்தோஷம் தலைகால் புரியாது அவனுக்கு! பெரிய பெரிய புள்ளிகளெல்லாம் புகழ்ச்சி வார்த்தைகளில் படமெடுத்த நாகம்போல் ஆடும் பொழுது, பித்துக்குளி சேதுவின் அதிர்ஷ்டத்தைப் புகழ்வதோடு விடாமல் அவன் புத்திசாலித்தனத்தையும் புகழ ஆரம்பித்து விட்டால் கேட்க வேண்டுமா?

அப்படிப்பட்ட சேதுவுக்கு ஒரு நாள் அதிர்ஷ்டம் வந்தே விட்டது. அன்று அகஸ்மாத்தாக நான் தபாலாபீஸ் பக்கம் போயிருந்தேன். அப்பொழுதுதான் ஒரு தந்தியை வாங்கி முடித்த போஸ்ட்மாஸ்டர், "பார்த்தீர்களா ஸார், நம் சேதுராமனுக்கு ஐந்து லக்ஷம் ரூபாய் 'டர்பி' ரேஸிலே விழுந்திருக்கிறதென்று தந்தி வந்திருக்கு, ஸார்! 19-ம் நம்பர் 'துட்வில்' என்ற குதிரையாம், ஸார்!" என்று சொன்னார்.

"அட, பாவி! கடைசியில் அடிச்சுட்டானே!" என்று மனதில் நினைத்துக் கொண்டு, இந்தச் சமாசாரத்தை முன்னால் தெரிவித்த கைங்கரியத்தை ஏற்றுக்



கொள்வதற்காக நான் சேதுவைத் தேடிக் கொண்டு 'குடுகுடு' வென்று ஓடினேன்.

"அடேய், சேது! கைகாரண்டா, நீ! உன் புத்திசாலித்தனம் யாருக்கும் வராதுடா! கடைசியிலே சமயம் பார்த்துத் தட்டி விட்டாயே? உம், எழுந்திருடா, மண்டு!" என்று சொல்லிக் கொண்டே, அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு தெருப் பக்கம் வந்தேன்.

ஹிண்டு ரேஸ் புத்தகத்தை வைத்துக் கொண்டு எந்தக் குதிரை முதலில் வரும் என்று யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சேதுவுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு ஒருவாறு மூச்சை அடக்கிக் கொண்டு விஷயத்தை வெளியிட்டுவிட்டு, தந்திச் சேவகன் கொண்டு வரப்போகும் தந்தியை வாங்குவதற்குத் தயாராக இருக்கும்படிச் சொல்லி முடித்தேன்.

இதற்குள் விஷயம் காட்டுத் தீபோல் பரவி, அந்தக் காட்டுத் தீயினுடைய உஷ்ணத்தைத் தாங்காதவர்கள் போல் தெரு ஜனங்கள் பூராவும் சேதுவின் வீட்டிற்கு முன்னால் வந்து 'ஜே, ஜே' என்று கூடி விட்டனர்.

"அடேய், சேது! ஐந்து லக்ஷத்திற்கும் பட்ஜட் தயாராக இருக்கிறதல்லவா? அதை உடனே அமுலுக்குக் கொண்டு வந்து விடு! கொஞ்சமும் யோசிக்காதே! 'நண்பர்களுக்கு டீ பார்ட்டி' என்று அதில் ஒரு 'ஐட்டம்' இருக்கிறதே, அதை நாளைக்கே வைத்துக் கொள்ளலாம். என்ன சொல்கிறாய்?" என்று மேலும் மேலும் அவனை உற்சாகப் படுத்திக் கொண்டே, தந்திச் சேவகனை எதிர்ப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கால் மணி நேரமாகியும் தந்திச் சேவகன் வந்து சேரவில்லை. கூட்டம் மேலும் மேலும் வந்து சேர்ந்து கொண்டேயிருந்தது. அரை மணி நேரமும் ஆயிற்று;

**வேலை நிறுத்தம்**

தூக்குத் தண்டனை யடைந்திருந்த கைதி யொருவன், தனக்கு நேரப் போகும் கதியைப் பற்றி ரொம்பவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் அங்கே ஜெயில் வார்டர் ஒருவன் வந்தான். அவனைப் பார்த்ததும் கைதி இரக்கம் தோய்ந்த குரலில், "என்னப்பா, இந்தத் தூக்குத் தண்டனையிலிருந்து நான் தப்பவே முடியாதா?" என்று கேட்டான்.

வார்டர் எதிர்பாராத விதமாக, "ஏன், தப்ப முடியும் போலிருக்கிறதே!" என்றான்.

"எப்படி?" என்று கேட்டான், கைதி மிக்க ஆச்சரியத்துடன்.

"தூக்கி விடுபவர்கள் எல்லாம் ஐந்து ரூபாய் அதிகச் சம்பளம் கொடுத்தால்தான் வேலை செய்வோம் என்று 'ஸ்டிரைக்' செய்திருக்கிறார்கள்!" என்றான் வார்டர்!

இன்னும் தந்திச் சேவகன் வராதது எனக்கு ஆச்சரியத்தை அளித்தது.

இந்தச் சமயத்தில் ஒரு மோட்டார் ஹாரன் சத்தம் தெருவில் நின்ற கூட்டத்தைக் கலைத்தது. மோட்டாரில் எங்கள் தெரு டாக்டர் ஆனந்தும், அடுத்த தெரு மகாலிங்க ஐயரும் உட்கார்ந்திருந்தார்கள்.

மகாலிங்க ஐயர் தம் சம்சாரத்திற்கு உடம்பு சரியாயில்லை யென்று அடிக்கடி டாக்டர் ஆனந்தைக் கால் நடையாகவே அழைத்துக் கொண்டு போவார். இன்று தம் வீட்டுக்கு டாக்டரைக் காரில் அழைத்துக் கொண்டு போகவே, 'கேஸ் ரொம்ப சீரியஸாகப் போய்விட்டதாக்கும்!' என்று எண்ணிக் கொண்டேன்.

திடீரென்று தெருவில் நின்ற கூட்டம் மோட்டாரை விரட்டிக் கொண்டு ஓடத் தலைப்பட்டது. "முட்டாள் ஜனங்கள்! நம்ம சேது ஐந்து லக்ஷம் ரூபாய்க்கு முதலாளியாகி யிருக்கும்பொழுது அவனை விட்டுவிட்டு ஓடுகிறார்களே!" என்று எனக்கு வந்த ஆத்திரத்தில் நான் அவர்களை வெறுத்துக் கட்டினேன்.

யார் எப்படிப் போனால் என்ன? நானும் சேதுவும் மட்டும் வீட்டை விட்டு அசையவில்லை. எனினும் தந்திச் சேவகன் இன்னும் ஏன் வரவில்லை என்றுதான் எனக்கு விளங்கவில்லை. "இங்கே நிற்கிற நேரத்தில் தபாலாபீஸுக்குப் போய் வாங்கிக் கொண்டால் என்ன?" என்று தோன்றிற்று. நானும் சேதுவும் தபாலாபீஸுக்குக் கிளம்ப வீட்டைவிட்டு இறங்கினோம். பின்னால் யாரோ கை தட்டிக் கூப்பிடும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தோம். கோடி வீட்டுச் சுப்பு எங்களை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தான்.

"அட யாரடா இவன், அபசகுனம் மாதிரி!" என்று நினைத்துக் கொண்டு நின்றோம்.

அவன் எங்களை நெருங்கியதும், "என்னடா விஷயம்?" என்று கேட்டேன்.

"கடைசியில் நம்ம சேதுவுக்கு இல்லைடா, லாட்டரி! அடுத்த தெரு சேதுராமனுக்கு அல்லவா விழுந்திருக்கிறது! லாட்டரி விழுந்த சேதியைக் கேட்டவுடன் அவன் மூர்ச்சை போட்டு விழுந்து விட்டானாம்! அவன் அப்பா டாக்டர் ஆனந்தை அழைத்துக் கொண்டு போயிருக்கிறார்!" என்றான் அவன்.

எனக்கு எல்லாம் ஒரு க்ஷணத்தில் விளங்கி விட்டது. அடுத்த தெரு மகாலிங்க ஐயர், டாக்டர் ஆனந்தைக் காரில் அழைத்துக்கொண்டு போனது அவர் சம்சாரத்திற்காக அல்ல வென்றும், மூர்ச்சையாகி விழுந்திருக்கும் தன் மகனுக்காக வென்றும், ஜனங்களெல்லாம் காரை விரட்டிக்கொண்டு ஓடியது மேற்படி விஷயத்தைக் கேள்விப்பட்டுத்தான் என்றும் தெரிந்து கொண்டு, முகத்தில் அசடு வழியச் சேதுவைப் பார்த்தேன்.

சேதுவுக்கு எங்கிருந்துதான் அவ்வளவு கோபம் வந்ததோ தெரியாது. உடனே தன் சட்டைப் பையில் கையை விட்டு ஒரு சீட்டை எடுத்து என்னிடம் கொடுத்தான். அதில், '19 நட்வில்' என்று எழுதியிருந்தது.

"பின் எப்படி அடுத்த தெரு சேதுராமனுக்குத் தந்தி வந்திருக்கும்? ஒரு வேளை போஸ்ட்மேன் தவறிப் போய்க் கொடுத்திருப்பானோ?—சரி, சேது! எது எப்படியானால் என்ன? நீ வாங்கியிருக்கும் ரேஸ் டிக்கெட்டை எடுத்துக் கொண்டு வா! கோர்ட்டில் கேஸ் போட்டு விட்டால் அலறிக் கொண்டு வாராதா, பணமெல்லாம்!" என்று சொல்லி அவனை நோக்கினேன்.

ஒரு கணத்தில் சேதுவின் கோபமெல்லாம் பறந்தது. அவன் முகத்தில் வேறொரு விவரிக்க முடியாத சோக பாவம் குடி கொண்டது. "அடடா! என்ன அசட்டுத்தனம்!" என்று தலையில் அடித்துக் கொண்டான்.

அப்பாவி சேது வழக்கம்போல் நம்பரை மாத்திரம் குறித்து வைத்துக் கொண்டிருந்தானே தவிர, பணமும் கட்டவில்லை, டிக்கெட்டும் வாங்கவில்லை!

# குருத்து இஞ்சி

★

எம். என். சுப்பிரமணியம்



ஹனுமந்த ராயர் சாப்பாட்டு ஹோட்டலில் நண்பர்கள் அட்டகாசமாய் அரட்டையடித்தவாறு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். தினந்தோறும் அந்த விறைத்த சோற்றையும், கறி, குழம்பு, ரசம் என்று பெயர் கொடுத்து அவர்களுக்கு ராயர் அளிக்கும் பதார்த்தங்களையும் பார்க்கும் போது, அவர்களுக்கு வீட்டு ஞாபகமும் பிரத்யேகமாய்ப் பிடித்த பதார்த்தங்களின் நினைவும் வருவது வழக்கம்.

"நீங்கள் என்னதான் சொல்லுங்கள் ஸார், தஞ்சாவூர் குடை மிளகாய் இருக்கிறதே, அதற்கு மிஞ்சித்தான் பாக்கி எல்லாம்!" என்றார் ஒருவர்.

"விட்டுத் தள்ளுங்கள் ஸார், மலையாளம் மாஹாளிக் கிழங்கைத் தின்ற வாயால் மற்றொன்றைத் தீண்டுவதா? என்ன எழவோ, ஜன்மாந்திரத்தில் இந்த ராயருக்கு என்ன கடன் பட்டேனோ, அதை இப்பொழுது தீர்த்துத் தொலைக்கிறேன்!" என்றார் மற்றொருவர்.

"சேப்பங்கிழங்கும் வெண்டைக்காயும் சேர்த்துப் போட்டுச் சாம்பார் வைத்துச் சாப்பிட்டவர்களுக்கல்லவா அதன் அருமை தெரியும்!" என்றார் ஒரு வழவழா குழகுழா.

"எனக்கு என்னவோ பகவான் கும்பகோணம் குருத்து இஞ்சியில் பஞ்சப் பிராணனையும் வைத்துவிட்டான்! சேர் பத்து ரூபாய் சொன்னாலும் வாங்கிவிடுவேன்!" என்றான் அப்போதுதான் வந்து கொண்டிருந்த சேதுராமன்.

"எதைச் சாப்பிட்டால் என்ன? 'அவள்' இருந்து ஒரு சாதாரண சமையல் செய்து, 'அவள்' கையால் பரிமாறிச் சாப்பிட்டால், அதற்கீடு ஒன்றுமே யில்லை, ஸார்! வீணாகப் பேச்சை ஏன் வளர்த்துகிறீர்கள்?" என்று பட்டவர்த்தனமாய் ஒப்புக் கொண்டார் ஒரு வெள்ளை உள்ளம் படைத்தவர்.

ஆபீஸிலிருந்து வந்ததும் 'பாட்மிண்டன்' விளையாடி விட்டு, நேரே ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குப் போவது சேதுராமனின் அன்றாட அலுவல். அவனும் அவனது சிநேகிதன் பாலுவும் ஒரு சிறிய வீட்டை அமர்த்திக் கொண்டிருந்தார்கள். இருவருக்கும் ஹோட்டல்தான் சாப்பாட்டிற்குக் கதி. இன்னும் கலியாணமாகவில்லை. அவர்களுடைய பெற்றோர் கிராமத்தில் இருந்தார்கள். இருவருக்கும் ஒரே ஊர்.

ஹோட்டலில் சுற்றுமுற்றும் பார்த்த சேது, 'பாலு ஏன் இன்று வழக்கம்போல் சாப்பிட வரவில்லை?' என்று யோசித்தான். சட்டென்று ஞாபகம் வந்தது. சாப்பிடத் தயாரானவன் சாப்பிடாமலே கிளம்பி விட்டான்.

அன்றைக்கு அவன் தாயாரிடமிருந்து வந்த கடிதத்தில், "நாளைய தினம் பாலுவின் தங்கை அங்கு வந்து சேருவாள். அவளுக்கு இப்போது பள்ளிக்கூடம் விடுமுறையாதலால், ஓரிரண்டு மாதம் உங்களோடு இருப்பாள். கொஞ்ச நாள் ஹோட்டல் சாப்பாடு வேண்டாம். அவள் சமைத்துப் போடுவாள். அவளுடன் உனக்குப் பிடித்த நல்ல குருத்து இஞ்சி கொடுத்தனுப்பியிருக்கிறேன்" என்று அவள் எழுதியிருந்தாள்.

சேது லேசாகச் சிரித்துக் கொண்டான்.

பாலு வராத காரணம் இப்பொழுது விளங்கிற்று. அவன் தங்கையை அழைக்க ஸ்டேஷனுக்குப் போயிருக்க வேண்டும். அடுத்த நாள் தமிழ் வருஷப் பிறப்பாதலால் சில சாமான்கள் வாங்குவதற்காகக் கடைத் தெருவை நோக்கி வேகமாக நடந்தான்.



ஒரு கையில் சாமான் பை, மற்றொரு கையில் 'பாட்மிண்டன் பாட்' இவற்றுடன் வீட்டை நெருங்கிய சேது, வீட்டின் தோற்




த்தில் என்றுமில்லா புதுமையைக் கண்டான். வாசல் நன்கு துப்புரவாகப் பெருக்கப்பட்டு அதன்மீது ஒரு பெரிய மாக்கோலம் மின்னியது. வாசற்படிக்கு மேல் மாவிலைத் தோரணம் அசைந்தாடியது. தாழ்வாரம் சுத்தமாகக் கழுவப்பட்டுப் பளபளத்தது. மொத்தத்தில், பொறுப்பற்ற தடிப் பிரம்மசாரிகளின் விடுதியாகக் கிடந்த வீடு, யாருடைய கை பட்டோ புத்துயிர் பெற்றெழுந்து பொலிவுடன் திகழ்வதை அவன் கண்டான்.

“தீர்த்தக் கரையினிலே—தெற்கு மூலையில்
செண்பகத் தோட்டத்திலே......”

என்ற அடிகள் இசை ரூபமாய் உள்ளேயிருந்து வருவதைக் கேட்ட சேது ‘பூட்ஸ்’ சத்தத்தை அடக்கிக் கொண்டு, வியப்பும் பூரிப்பும் மேலிட மெல்ல உள்ளே அடி வைத்தான்.

மேஜைமீது புஸ்தகங்களை அடுக்கி வைத்துக்கொண்டிருந்த ஒரு பெண் சற்றே திடுக்கிட்டு, அவனைத் தனது வட்டக் கரிய விழிகளால் பார்த்தாள். இயற்கையிலேயே ரொம்ப லஜ்ஜையுள்ள சேது, கொஞ்சம் நிலை தடுமாறி மனம் தெளிவதற்குள் அவன் உள்ளே சென்று விட்டான்.

கையோடு கொண்டு வந்திருந்த சாமான்களை மெல்லக் கட்டிலின் மீது வைத்து விட்டு, நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு பூட்ஸைக் கழற்றிக் கொண்டே அறையைச் சுற்று முற்றும் பார்த்தான். கண்ணாடி அலமாரி, சுவர்களின் மூலையில் குறுக்கே நகர்த்தப்பட்டு அங்கே கர்வத்தோடு நின்றுகொண்டிருந்தது! அதற்குப் பக்கத்தில் சிறிய மேஜை வந்திருந்தது. அதன் மீது ஓர் ஓரத்தில் ரேடியோ. அந்த மேஜை மீது, இவ்வளவு நாள் எங்கோ தூங்கிக் கொண்டிருந்த ஓர் அழகிய பூப் போட்ட பெரிய கைக்குட்டை லேசாக அசைந்தாடியது. சாய்வு நாற்காலி, கட்டில் இவைகள் இடம் மாறுதல் பெற்றுத் தங்களது ஸ்தான மாறுதலைப் பெருமையுடன் எடுத்துக் காட்டின. வண்ணான் உருப்படிகள் எப்போதும் போல் ஒரு மூட்டையாயிராமல் அலமாரியில் தரத்திற்குத் தகுந்தவாறு அடுக்காகப் போய்ச் சேர்ந்திருந்தன. சுருட்டிச் சுருட்டி அவனும் பாலுவும் அலமாரியில் எறியும் சட்டைகளும் கால் சட்டைகளும் வெளியேற்றப்பட்டு வண்ணான் பெட்டியில் போய்ச் சேர்ந்திருந்தன!

இப்பொழுது ஒரு சிக்கலான பிரச்னை சேதுவின் மனத்தில் எழுந்தது. கழற்றின பூட்ஸை எங்கே போடுவது? தலையைச் சொறிந்து யோசனை செய்து கொண்டிருந்தான்.

“ஏண்டா பழி, இவ்வளவு நேரம்?” என்று கேட்டுக் கொண்டே உள்ளேயிருந்து பாலு வந்தான். அவனோடு கமகமவென்று உள்ளே பொரிக்கும் பூரியின் வாசனையும் வந்தது!

சேதுராமனிடமிருந்து யாதொரு பதிலையும் எதிர்பார்க்காமலே பாலு, “கால் கையை அலம்பிக் கொண்டு வந்து சேரு; சாப்பிடலாம். நாழியாச்சு!” என்றான்.

யந்திரம்போல் எழுந்தான் சேது.

இலையில் குருத்து இஞ்சி வந்து விழுந்தது; ஒரு கை பார்த்தான். மறுபடி வந்து விழுந்தது; சேது சளைக்கவில்லை!

"இஞ்சியை வளைத்துக் கொண்டு இப்படித் தின்னாயானால் உடம்பு என்னத்திற்கு ஆகும்? என்ன ஹேமா, நீயும் போட்டுக் கொண்டேயிருக்கிறாயே?" என்றான் பாலு.

ஹேமா வளை குலுங்க கைகளை ஆட்டிக் கொண்டு கலகல வென்று சிரித்தாள்.

"அவருக்கு இஞ்சி ரொம்பப் பிடிக்கும் என்று எனக்குத் தெரியும். அவருடைய அம்மா சொன்னாள். சொன்ன தோடல்லாமல் ஒரு மூட்டை இஞ்சியும் என்னோடு கட்டி விட்டிருக்கிறாள்! வேண்டிய வரை சாப்பிடட்டுமே!" என்றாள் சிரிப்பின் முடிவில்.



சேதுவின் முகத்தில் அசடு தட்டியது. பிள்ளை மீதுள்ள வாஞ்சையால், தான் இஞ்சிப் பிரியன் என்ற சமாசாரத்தை எப்படிக் கபடமில்லாமல் 'டமாரம்' போட்டு விட்டாள் தன் தாயார் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

"அப்படியா சேதி! அப்பனே, சாப்பிடடா, சாப்பிடு! நன்றாய்ச் சக்கையாய் வெளு!" என்றான் பாலு இரைந்து சிரித்துக் கொண்டே.

★

**அன்று** இரவு பூராவும் தூக்கமே இல்லை, சேதுவுக்கு! ஆபீஸிலிருந்து வந்தது முதல் நடந்த சம்பவங்களெல்லாம் திரும்பத் திரும்ப அவன் மனக்கண்முன் வந்து கொண்டிருந்தன.

வளை குலுங்கும் ஓசையும் கலகலவென்னும் சிரிப்பொலியும் மாறி மாறி அவன் காதில் கேட்டுக் கொண்டிருந்தன. அடுத்த அறையில் தூங்கும் ஹேமா தன்னைப்பற்றி என்ன நினைப்பாள் என்ற கேள்வி அடிக்கடி எழுந்து அவன் மண்டையைத் துளைத்துக் கொண்டிருந்தது.

ஹேமாவை எப்பொழுதோ கிராமத்தில் குழந்தைப் பருவத்தில் அவன் பார்த்திருக்கிறான். அவளுடைய வீடு அவன் தெருவுக்குப் பக்கத்துத் தெருவில்தான் இருந்தது. அவன் கிராமத்திற்குப் போனது ரொம்பக் குறைவு. இப்பொழுதுதான் 'ரிடையர்' ஆனபிறகு அவன் தகப்பனார், தாயாருடன் கிராமத்திற்குப் போயிருக்கிறார். சேது படிப்பை முடித்துக் கொண்டு சென்னையிலேயே உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

மறுநாள் விடிந்ததும் சேது வழக்கம் போல் 'வாக்கிங்' கிளம்பினான். கடற்கரைக்கு வந்து புது வருஷச் சூரியனை வரவேற்றான். கனைகாணக் கடலினின்று கிளம்பிய சூரியன் நீள் விசும்பின்மீது ஏற ஆரம்பித்ததும், 'புன்மை இருட்கணம் போயின யாவும்!' என்று அவன் வாய் முணுமுணுத்

தது. வழியெல்லாம் மாதர்கள் வீட்டு வாசல்களில் கோலமிட்டுக் கொண்டிருந்தார்கள். புத்தாடையின் சலசலப்புச் சத்தம் கேட்டது. புது வருஷம் ஆரம்பத்திலிருந்தே தனக்கு உவகையூட்டத் தலைப்பட்டிருக்கிறது போலும் என்றெண்ணியவாறே வீடடைந்த சேது, பல் தேய்த்து விட்டுக் 'குற்றாலக் குறவஞ்சி'யை எடுத்து வைத்துக்கொண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்தான்.

அப்போதுதான் குளித்து விட்டு வந்த பாலு, "டேய், மசமசவென்று உட்கார்ந்திருக்காதேடா? இன்றைக்கு வருஷப் பிறப்பு. குளித்துவிட்டுத் தயாராய் இரு. வருஷம் ஒன்பதேகால் மணிக்குப் பிறக்கிறது!" என்று பயமுறுத்தினான்!

சேது சிரித்தான்.

"ஒன்பதே கால் மணிக்குத்தான் வருஷம் பிறக்கப் போகிறதா? உனக்கு எப்படித் தெரியும்?"

"சாஸ்திரிகள் சொன்னார்டா! அவர் சொன்ன பிறகு 'அப்பீல்' ஏது?" என்றான் பாலு.

இந்தச் சமயத்தில் கூடத்தில் எரிந்து கொண்டிருந்த ஊது வத்தி வாசனையோடு, சமையலறையிலிருந்து போளி வாசனையும் வந்து கொண்டிருந்தது. தங்கைக்கு ஒத்தாசை செய்வதாய்ச் சொல்லிக் கொண்டு பாலு என்னவோ அமளி பண்ணிக்கொண்டிருந்தான். எல்லாம் முடிந்த பிறகு அவன் உள்ளேயிருந்து, "டேய், வாடா!" என்று கத்தினான். சேது சாப்பிட எழுந்தான். போகும்போது புஸ்தகத்தையும் கையோடு எடுத்துக் கொண்டு போய் மடிமீது வைத்துக் கொண்டு இலையருகே உட்கார்ந்தான்.

"இதென்னடா, கெட்ட வழக்கம்! சாப்பிடும்போது புஸ்தகத்தை வைத்துக் கொண்டு!" என்று இரைந்தான் பாலு.

"குற்றாலக் குறவஞ்சி, கும்பகோணம் குருத்திஞ்சி இரண்டையும் ஒரே மூச்சில் ரஸிக்க வேண்டுமென்று அவருக்கு ஆசையாயிருந்தால், உனக்கென்ன அதில் கஷ்டம்?" என்றாள் ஹேமா நகைத்துக் கொண்டே!

லஜ்ஜை யெல்லாம் பறந்துபோய் சேதுவும் பாலுவுடன் சேர்ந்து கொண்டு கடகடவென்று சிரித்து விட்டான்.

இச் சம்பவத்திற்குப் பிறகு சேது கொஞ்சம் சங்கோசத்தை விட்டவனாய், ஹேமாவுடன் சரள ஸ்வபாவத்துடன் பழகத் தலைப்பட்டான்.

அன்றைய தினம் விடுமுறையாதலால் மூவரும் கிளம்பி 'எக்ஸிபிஷ'னுக்குச் சென்றார்கள். சுற்றிச் சுற்றி அலைந்து கடைகளைப் பார்த்தபின், ஹேமா ஒரு வளைக் கடைக்குள் நுழைந்தாள். மூவரும் பலரக வளையல்களைப் பார்வையிட்டனர். வளையல்களைப் பரிசோதித்துக் கொண்டிருந்த சேது ஒரு வளையலைக் கையிலெடுத்து ஹேமாவிடம் காட்டி, "இது நன்றாயிருக்கிறதல்லவா?" என்றான்.

"வாஸ்தவத்திலேயே இந்த வளையல்தான் நன்றாயிருக்கிறது! இதைத்தான் வாங்கிக் கொள்ளப் போகிறேன்!" என்றாள் ஹேமா.

சேது ஆனந்தபரவசனானான். பர்ஸிலிருந்து பணம் எடுக்கும்போது, ஹேமா தன்னைப் பரிவுடன் நோக்குவதை அவன் கவனிக்கத் தவறவில்லை. அதே ரகத்தில் மூன்று ஜோடி வளையல்கள் வாங்கிக் கொண்டு கிளம்பினார்கள்.

★

அடுத்த நாள் சேது ஆபீஸிலிருந்து வீட்டுக்குக் கிளம்பும்போது பாலு வந்து சேர்ந்தான்.

"இன்றைக்கு என் அப்பாவிடமிருந்து கடிதம் வந்தது" என்று சொல்லிக்கொண்டே பாலு அவனிடம் ஒரு கடிதத்தைக் காட்டினான். அதில், 'ஹேமா போனது முதல் உன் அம்மாவுக்கு லேசாக ஜுரம் கண்டு இப்பொழுது ஜாஸ்தியாகி, எழுந்து நடமாட முடியாமலிருக்கிறது. நீ உடனே இக் கடிதம் கண்டவுடன் ஹேமாவை யாருடனாவது துணை சேர்த்து அனுப்பி விடு. ஒத்தாசைக்கு வேறு ஒருவரும் இல்லை' என்று எழுதியிருந்ததைப் படித்த சேது, பாலுவின் முகத்தைப் பரிதாபமாய்ப் பார்த்தான்.

"வேறு என்ன செய்வது? இன்றே ஹேமாவை ரயிலேற்றிவிட்டு வரவேண்டியதுதான்!" என்றான் பாலு.

சேதுவுக்கு நாடி தளர்ந்து விட்டது. மௌனமாக வெளியே வந்து கால்கள் போன வழி சென்றான். ஏதோ ஒரு ஸினிமா கொட்டகைக்குள் நுழைந்து, இரண்டு ஆட்டங்களையும் சேர்ந்தாற்போல் பார்த்தான். நாளது தேதி பரியந்தம் அவனுக்கு அந்தப் படத்தின் பெயரோ, திரையில் தோன்றிய விஷயங்களோ ஒன்றும் தெரியாது!

இரவு இரண்டு மணி சுமாருக்கு வீடு வந்து படுத்தான். அவனது கொதிப் பேறிய மண்டையில் என்னென்னவோ சிந்தனைகள் சுழன்றன.

காலையில் வீடு சூனியமாகத் தோன்றியது. மேஜையின்மீது 'குற்றாலக் குறவஞ்சி' கிடந்தது. ஒருவேளை ஹேமா தனக்கு ஏதாவது கடிதம் எழுதி வைத்திருக்கக்கூடும் என்ற எண்ணம் மேலிடவே, சேது மேஜை, அலமாரி இவைகளை நன்கு ஆராய ஆரம்பித்தான். ஒன்றும் தென்படவில்லை. புஸ்தகத்தில் இருக்கலாமல்லவா?

'குற்றாலக் குறவஞ்சி'யைப் பிரித்தான். கடிதமொன்றுமில்லை. ஆனால்......

ஆம், புஸ்தகத்தின் நடுவில் ஒரு ஜோடி வளையல்கள் இருந்தன! அவை முதல் நாள் 'எக்ஸிபிஷ'னில் வாங்கப்பட்டவை!

அவைகளைக் கையிலெடுத்துப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே இரு பெரிய கண்ணீர்த் திவலைகள் அவன் கண்களை மறைத்தன.

அடுத்த நாள் ராத்திரி சேதுவுக்கு மற்றொரு பேரிடி காத்திருந்தது. வெளியே யிருந்து வந்த பாலு, தனக்குத் திடீரென்று நாக்பூருக்கு மாற்றலாகி விட்டதென்றும் மறுநாளே கிளம்பியாக வேண்டுமென்றும் சொன்னான்!

சேதுவுக்கு ஒன்றும் புரியவில்லை; அடுத்த நாள் பாலு போயே போய் விட்டான்.

பாலு போன எழெட்டு நாட்களுக்கெல்லாம் அவன் தாயார் இறந்துவிட்டதாகச் சேதுவுக்குத் தகவல் கிடைத்தது. ஹேமா தாயற்றவளாய் விட்டாள் என்ற எண்ணம் சேதுவின் உள்ளத்தில் கொஞ்சம் உறங்க ஆரம்பித்திருந்த பாசத்தையும் மறுபடி தட்டி எழுப்பி விட்டது. வேளா வேளைக்குச் சாப்பிடாமலும் யந்திரம் போல் ஆபீஸுக்குப் போவதுமாய்க் கிட்டத் தட்ட ஒரு மாதத்தைக் கழித்து விட்டான்.

அன்றைக்கு ஆபீஸிலிருந்து வரும்போது அவனுக்கு மண்டைக் கொதிப்பும் கண்ணெரிச்சலும் அதிகமாயிருந்தன. கொஞ்சம் குளிரெடுத்து, ஜுரம் வரும்போல் தோன்றியது. தன்னந் தனியே வீட்டில் படுத்திருந்த அவனுக்குச் சட்டென ஒரு யோசனை தோன்றியது.

அடுத்த நாள் ஆபீஸுக்குச் சென்று ஒரு மாதம் லீவு போட்டுவிட்டுக் கிராமத்திற்குக் கிளம்பி விட்டான்.

★

பிள்ளையின் இளைத்து வறண்டுபோன உடம்பைக் கண்டு திடுக்கிட்டுப் போனாள் தாயார்.

"இரண்டு நாளாய் உடம்பு சரியில்லாததால் லீவு போட்டுவிட்டு வந்து விட்டேன்!" என்று ஏதோ சொல்லி மழுப்பினான் சேது.

ஊருக்குச் சாயங்காலம் வந்து சேர்ந்ததால், வந்தவுடனேயே பக்கத்துத் தெருவிலிருந்த ஹேமாவின் வீட்டிற்குப் புறப்பட முடியவில்லை. அப்படிப் புறப்படுவது சந்தேகத்திற்கு இடம் தருவதாகுமென்றும் அவன் எண்ணினான். ஆகவே, அடுத்த நாள் போகலாம் என்று நிச்சயித்தான். எனினும் வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. வெளியே கோவில் பக்கம் போகக் கிளம்பினான்.

ஊருக்குக் கிழக்குப் பக்கத்தில் இருந்த வெங்கடாசலபதி கோவில் சந்தடி யற்று நிசப்தமாயிருந்தது. பட்டாசாரி குளத்தங் கரையில் யாருடனோ வம்பு அளந்து கொண்டிருந்தார். உள்ளே ஸ்வாமி விளக்கைத் தவிர சந்நிதியில் ஒரே விளக்கு மட்டும் ஆடியவாறே எரிந்து கொண்டிருந்தது. அதற்கேற்றாற்போல் தூண்களின் நீண்ட பெரிய நிழல்கள் ஆடிக்கொண்டிருந்தன. தரையில் பிராகாரத்தைச் சுற்றி யாரோ போட்டிருந்த மாக்கோலம் இருட்-




"வாங்க, ஏன் வெளியிலேயே நிற்கிறீங்க? உள்ளே வந்து நல்லா வீட்டைச் சுத்திப் பாருங்கோ......!"

"அட, நாங்க வீட்டைப் பார்க்க வரலீங்க; இந்தப் போர்டைப் பார்த்து ரொம்ப நாளாச்சேன்னுதான் பார்க்கிறோமுங்க!"

டில் எதையோ தேடுவது போல் முடிவில்லாமல் வளர்ந்து வளர்ந்து போய்க் கொண்டிருந்தது. எண்ணெய்ச் சிக்கு நாற்றமும் வௌவால் புழுக்கை நாற்றமும் கலந்து கோவில்களுக்கே உரியதான ஒரு தனி வாசனை எங்கும் வியாபித்துச் சேதுவைத் திணற அடிப்பதாயிருந்தது. ஏழுமலையான் புன்னகை புரிந்து கொண்டிருந்தான். அவனை நமஸ்கரித்துக் கை கூப்பி எழுந்த சேது, விக்கிரகத்திற்கு அருகில் யாரோ விளக்கில் எண்ணெய் இடுவதைப் பார்த்தான். கொஞ்சம் கூர்ந்து கவனிக்கவே சேதுவுக்கு ரோமம் சிலிர்த்தது. வெறும் பிரமைதானா? இல்லை, சந்தேகமில்லை! ஹேமாதான்!

"ஹேமா!" என்ற வார்த்தை அவன் தொண்டையினின்று — அல்ல, இதயத்திலிருந்து—உந்தித் தள்ளப்பட்டது!

'ஹேமா' வென்று பேரிரைச்சல் போன்ற எதிரொலி கேட்டது. ஹேமா திடுக்கிட்டாள். நடக்க முடியாமல் உன்னி நடந்து சென்று அவள் கையைப் பற்றினான் சேது. பெருமாள் புன்னகை புரிந்து கொண்டேயிருந்தான். ஆடி ஆடி இருவருடைய நிழல்களும் பெருமாளின் பொன்னடியைத் தொட்டன.

"இன்று சாயங்காலம் வர்..." என்றான் சேது, ஹேமாவின் கையை அழுக்கியவாறு.

இதற்குள் வெளியே யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்கவே, ஹேமா அவன் கையை மெல்ல எடுத்துவிட்டு, 'விடுவிடு' வென்று வெளியே போய்விட்டாள். இரு பெரிய கண்ணீர்த் திவலைகள் சேதுவின் கைமீது விழுந்தன.

"'இன்று சாயங்காலம் வந்தேவிட்டேன்' என்று சொல்ல எண்ணினால் போதும்!" என்றெண்ணியவாறு ஹேமா கோவில் திருப்பத்தைக் கடந்தாள், முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டே.

★

வீடடைந்த சேதுவைக் கடுமையான ஜுரம் பற்றிக்கொண்டது. சுமார் பத்து நாட்கள் வரை அவனுக்கு ஸ்மரணையே இல்லை.

ஜுரம் இறங்கி மூன்று நாட்கள் ஆயின. அநேகமாய் சொஸ்தமாகி விட்டது. ஆனால் ரொம்ப பலஹீனமாயும் எழுந்து நடமாட முடியாமலும் இருந்தது. புதிதாக உலகத்தைப் பார்ப்பவன் போல் படுத்தவாறே அவன் ஒவ்வொரு சாமானையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

கடுங் கோடையின் முடிவில் மழையைக் கண்ட செம்மண் பூமியில் இயற்கைத் தாவரம் தளிர் விட்டுக் கிளம்புதல் போல், சுயநினைவுண்டான பிறகு சேதுவின் மனத்தில் ஹேமாவைப் பற்றின நினைப்பு மேற்றெடுக்க ஆரம்பித்தது.

மத்தியானம் சாப்பாடான பிறகு எல்லாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது, ஹேமாவைப் பற்றின சமாசாரம் வெளியாயிற்று.

"பாவம், தங்கமான பெண். வேறு ஒருவர் கதியில்லை. அவளுடைய மாமா, சமீபத்தில் இங்கு வந்திருந்தவர், அவளைக் கூடவே அழைத்துச் சென்று விட்டார். கவலையை மறந்திருக்கத் தகப்பனார் பெரிய பிள்ளையிடம் கொஞ்ச நாள் இருக்கப் போவதாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டார். பாவம், தினம் ஒரு தடவையாவது ஹேமா இங்கு வந்து 'பிள்ளைக்கு உடம்பு எப்படியிருக்கிறது?' என்று விசாரித்துக் கொண்டேயிருந்தாள், ஊரை விட்டுக் கிளம்பும் வரைக்கும்! அப்போதெல்லாம் இவனுக்கு ஸ்மரணையே கிடையாது!" என்று தாயார் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்ட சேது, சுவர்ப்பக்கம் திரும்பிக் குப்புறப் படுத்துக் கொண்டான்.

உடம்பு சொஸ்தமான பிறகு ஊரில் இருக்கப் பிடிக்காமல் சென்னை வந்து ஆபீஸுக்குப் போனான். மானேஜர் அவனை மதுரையில் பெரிய வேலைக்கு மாற்றியிருப்பதாகவும், நேரே அங்கு போய் வேலையை ஒப்புக் கொள்ள வேண்டுமென்றும் சொன்னார். அன்றே கிளம்பி விட்டான். ஒரு ஹோட்டலில் 'ரூம்' வைத்துக் கொண்டு மதுரையில் ஆபீஸ் வேலையைக் கவனித்து வந்தான்.

மானேஜர் மாதுர்பூதம் அய்யர் கொஞ்சம் கூடச் சிடுசிடுப்பே யில்லாமல், எல்லோருடனும் பிரியமாயும், 'ஜாலி'யாயும் இருந்தார். சேது வந்தது முதல் அவனிடம் ஒரு தனிப் பிரியமும் அக்கறையும் காட்டினார். "ஹோட்டலில் எதற்கு இருக்க வேண்டும்? நம்முடைய வீடு பெரிதாயிருக்கிறது. அங்கேயே ஒரு 'போர்ஷ'னில் நீ இருக்கலாமே!" என்று கூடச் சொன்னார். ஆயினும் சேதுவின் லஜ்ஜை ஸ்வபாவத்தை அறிந்து கொண்ட அவர் அந்த விஷயத்தை மேலும் வற்புறுத்தவில்லை.

அன்று சேதுவைக் கூப்பிட்டுத் தமது அறையில் ஆபீஸ் விஷயமாய்ப் பேசிக் கொண்டிருந்த மாதுர்பூதம் கடைசியில், "சேது, நாளைக்கு ஆபீஸ் கிடையாது. ஞாயிற்றுக்கிழமை யல்லவா! காலையில் சீக்கிரம் வந்துவிடு, சம்மாத்திற்கு. சேர்ந்து சாப்பிடலாம்" என்றார்.

அழைப்பைத் தட்ட முடியாமல் மறுநாள் அவருடைய வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான் சேது. இருவரும் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

"குருத்து இஞ்சி யென்றால் எனக்கு உயிர்! சேர் இருபது ரூபாயா யிருந்தாலும் வாங்கி விடுவேன்! உனக்குப் பிடிக்குமா?" என்று கள்ளச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே கேட்டார் மாதுர் பூதம்.

சேதுவின் முகத்தில் அசடு தட்ட ஆரம்பித்தது; முகம் தொங்கிப் போயிற்று.

இதே சமயத்தில் உள்ளே யிருந்து வளை குலுங்கும் சத்தமும் கலகலவென்னும் சிரிப்பொலியும் கேட்டன.

'இன்னமூதாட்டும் மணிக் கை'யில் அன்னத் தட்டை ஏந்தியவளாய், சிரிப்பினாலும் நாணத்தினாலும் சிவப்பேறிய முகத்துடன் ஹேமா சமையலறையி லிருந்து இவர்கள் உட்கார்ந்திருந்த அறைக்குள் பிரவேசித்தாள்!

.தா கெஞ்சிக் கேள்வி கேட்கும் முறையில் ஹேமாவின் முகத்தைப் பார்த்தான் சேது. அவள் சிறு நகை செய்து தலையைக் கீழே குனிந்து கொண்டாள்.

"ஓஹோ!" வென்று சிரித்துக் கொண்டே மாதுர்பூதம் சேதுவின் தொடையில் ஓங்கி ஓர் அடி வைத்து, அவன் மடியில் ஒரு கடிதத்தை வைத்தார்.

அந்தக் கடிதம் இதுதான் :—

நாக்பூர்

......................

மாமா அவர்களுக்கு,

..........நான் சேதுவின் பெற்றோருடன் எல்லாம் ஏற்பாடு செய்துவிட்டேன். ஹேமாவிற்கும், சேதுராமனுக்கும் கல்யாணம் நிச்சயித்து, தேதி குறித்து எனக்குத் தந்தி கொடுக்கவும். நான் உடனே வந்து சேருகிறேன்.

ஒரு சின்ன விஷயம். பையனுக்கு இந்தப் பரந்த உலகத்தில் ஹேமாவிற்கு அடுத்தபடியாகப் பிடித்த வஸ்து, நல்ல கும்பகோணம் குருத்து இஞ்சி! ஞாபகமிருக்கட்டும்!

தங்கள் அன்புள்ள,

பானு.




நண்பன் :—நேற்று உன் வீட்டில் ஒரே சத்தமா யிருந்ததே! என்ன விசேஷம்?

அவன் :—பிரமாதம் ஒன்றும் இல்லை, என் மனைவிக்கும் எனக்கும் தகராறு ஏற்பட்ட போது நான் ஓர் அறையில் புகுந்து கதவைத் தாளிட்டுக் கொண்டேன். கதவைத் திறக்கும்படி அவள் கூச்சல் போட்டாள்!

நண்பன் :—கதவைத் திறந்தாயா?

அவன் :—ஒருக்காலும் இல்லை. அவள் சொல்லுகிறபடி நானா கேட்டு விடுவேன்? என் வீட்டிற்கு அதிகாரி நானா, அவளா?

●

காதலன் :—நாம் இப்படி அடிக்கடி சந்தித்துக்கொண்டிருக்கிறோமே, சீக்கிரம் விவாகம் செய்து கொள்ள வேண்டாமா?

காதலி :— அதற்கு இப்பொழுது என்ன அவசரம்?

காதலன் :—அவசரம் இல்லைதான். ஆனால் நாம் ஒரு நாள் சந்திக்காவிட்டால்கூடப் பைத்தியம் பிடித்தமாதிரி ஆகிவிடுகிறதே! கல்யாணம் ஆகிவிட்டால் அது தெளிந்து விடுமல்லவா?

●

ராமன் (பக்கத்தி லிருப்பவரைச் சுட்டிக் காட்டி) :—இவரை உங்களுக்குத் தெரியுமா, மிஸ்டர் கிருஷ்ணன்? எனக்கு ரொம்ப வேண்டியவர். பத்மநாபய்யர் என்று பெயர். இவர் கிட்டேதான் ஆறு வருஷமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறேன்.

கிருஷ்ணன் :—என்ன, ஆச்சரியமா யிருக்கிறதே! வருஷக் கணக்காகச் சாதம் போடுவது என்றால் உங்கள் சிநேகத்தின் ஆழம்...!

ராமன் :—ஆமாம், இன்னும் எத்தனை வருஷம் வேணுமானாலும் இவர் எனக்குச் சாப்பாடு போடுகிறேன் என்கிறார். இந்த ஊரிலே 'பெஸ்ட்' ஹோட்டல் இவருடையதுதானே!

●

தொழிலாளி :—ஐயா, தங்களிடம் அதிகச் சம்பளம் கேட்கும்படி என் மனைவி சொல்லி யனுப்பினாள்.

முதலாளி :—உனக்கு அதிகச் சம்பளம் கொடுக்கலாமா என்று என் மனைவியைக் கேட்டுச் சொல்லுகிறேன்.

●

வைத்தியர் :— நான் கொடுத்த மருந்து எப்படி?

நோயாளி :—முதல்தரமான மருந்து. மூன்று ஸ்பூன் சாப்பிட்டதில் இருமல் போய் விட்டது; இரண்டு ஸ்பூன் தலையில் தேய்த்துக் கொண்டதில் தலைவலி போய்விட்டது; ஒரு ஸ்பூன் கண்ணில் விட்டுக் கொண்டதில் எரிச்சல் நின்று விட்டது; பாக்கி மருந்தை வெள்ளிப்பாத்திரம் தேய்த்ததில் பாத்திரம் நன்றாய் வெளுத்து விட்டது!

# கோகுல்

சந்தனாதித் தைலம்

அரைக்கீரை விதைத் தைலம்

கூந்தல் தைலம்







எங்கள் தயாரிப்புகள் ஒவ்வொன்றிலும் கோகுல் டிரேட் மார்க் இருப்பதை கவனியுங்கள்.

## டி.எஸ்.ஆர் & கோ கும்பகோணம்.

மதராஸ் ஏஜண்டு:

புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு:

B. பாலபட்டாபி,

வைசியாள் தெரு, கோயமுத்தூர்



# உங்கள் குழந்தை

குழந்தைகளின் வளர்ச்சிக்கு நிம்மதியான தூக்கம் மிகவும் அவசியம். குழந்தை தூங்காமலும், அடிக்கடி அழுதுகொண்டும் இருந்தால் உடம்பில் ஏதோ கோளாறு இருக்கிறதென்றே அர்த்தம்.

குழந்தைக்கு காய்ச்சலோ, மலச்சிக்கலோ அல்லது ஏதாவது வலியோ இருக்கிறதென்று தெரிந்தால் உடனே 'க்ரைப் கால்' கொடுங்கள். உடனே கண்டிப்பாய் குணமாகிவிடும். குழந்தை சுகப்படும். நன்குத் தூங்கும். நீங்கள் பெருமகிழ்ச்சியடையும் முறையில் குழந்தையைக் காண்பீர்கள்.

எப்பொழுதும் க்ரைப்-கால் பாட்டில் ஒன்று கைவசம் வைத்துக்கொள்ளுங்கள். பல்முளைக்கும் சமயத்தில் மிகவும் அவசியம்.




## க்ரைப் கால்



எல்லா குழந்தைகளின் நோய்களுக்கும்

தி மெக்லெக் நியூட்ரிமென்ட்ஸ் அன் பார்மஸூடிகல்ஸ் லிட்.

99,-ஏ, ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

ADARTS MNP. 48-Tamil.

## நீடித்த உழைப்பு
அத்துடன்
## குறைந்த செலவு!

இதைப் பரீக்ஷியுங்கள்... இதனால் எழுதிப் பாருங்கள்! எப்பேர்ப்பட்ட நிப்பு! வயிரத்தைப் போன்ற உறுதி — ஆயினும் வெல்வெட் போன்ற வழவழப்பு — ஏனெனில் இதன் நிப்பு 14 காரட் முழு தங்கம். அத்துடன் டிப்-டைம் ஆஸ்மி இரிடியம் துவைத்தது. மெண்ட்மோர் பேனாக்கள் ஸ்டட், லீவர் மற்றும் டிராப் முறையில் இங்கு போடும் விதங்களில் கிடைக்கும்.




விலை
ரூ. 15/-

இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது

# MENTMORE
*Auto-Flow*

## மெண்ட்மோர்
## ஆட்டோ-ப்ளோ

வியாபார விபரங்களுக்கு மேற்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும்:
**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்**
குவீன்ஸ் மான்ஷன்ஸ்
பாண்டியன் ரோடு, பம்பாய்

---




குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த டானிக்.

குழந்தைக்கு முக்கியமானது
## பேபி கிரைப்
குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது

மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து

இது சரீரத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, சரீரத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்




## அயோடிசால்




தேமல், படை, சேற்றுப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட — மருந்து —

## சைபால்

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
**தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
மதுரை

ஏஜண்டுகள்:—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், தைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பேர்ஹாம்பூர் & செகந்தராபாத்; சிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள்:—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்



தலைமை ஆபீஸ்:

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"

வடக்கு பீச் ரோடு, மதராஸ்



லோகல் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.



வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 72,00,000

செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 53,00,000

ரிசர்வ் நிதி ரூ. 60,72,602



சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி

# தாமதம் செய்யாதீர்கள்!

BISMAG

பிஸ்மாக் உட்கொள்ளுங்கள்!

உற்சாகக் குறைவாகவும் வாழ்க்கையிலேயே வெறுப்பும் கொண்டவராகவும் இருந்தால் பிஸ்மாக் (பைஸ-ரேடட் மக்னீஷியா) உட்கொள்ளுங்கள். அது வயிற்றில் ஏற்படும் எல்லா சங்கடங்களையும், அஜீரணத்தையும், சோம்பலையும், இன்னும் எல்லா வயிற்றுக் கோளாறுகளையும் நீக்க வல்லது.

உபயோகமற்ற போலிகளை வாங்காதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:
ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

# பொன் விழாவின் உதயம்



பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

வியாதியிலும் அவதிப்படும் மனித சமூகத்துக்கு சேவை புரிவதில் ஐம்பதாவது வருடம் ஆரம்பமாகின்றது. என்றும் போல் இன்றும் ஜீவாம்ருதம் வியாதிக்குப் பின் குணம் பெறுவோர், பலஹீனர் அனைவருக்கும் உகந்த அருமையான டானிக்காக விளங்குகிறது.



## ஆயுர்வேதாஸ்ரமம் லிட்
## மதராஸ் 17



நலை நிறைந்த கூந்தலே முகத்தின் அழகை எடுத்துக் காட்டுவது. கூந்தலே முக அழகை ஆக்குவதும் அழிப்பதும். கூந்தலழகையும் முக அழகையும் இன்றே கேசவர்த்தினியைக் கொண்டு விருத்தி செய்யுங்கள்.

அற்ப கேசத்தைவிட அழகுக்கு ஹானி வேறில்லை. இதைப் பரிஹரிக்கக் கேசவர்த்தினியைவிடச் சிறந்த மருந்துமில்லை. இழந்த கூந்தலையும் இளமையையும் கேசவர்த்தினியைக் கொண்டு இன்றே பெறுங்கள்.

அழகுள்ளவர் ஒரு சிலரே. ஆனால் கூந்தலழகையோ கேசவர்த்தினி உபயோகத்தால் ஒவ்வொருவரும் பெறலாம். கேச சம்பத்து படைத்தவர் அதை இழக்காமல் கேசவர்த்தினி கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியால் அதை அடையுங்கள்.

# கேசவர்த்தினி

**கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது**

**விலை அணா 12**

(மேற் செலவு வேறு)

**எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்**

தயாரிப்பவர் :

## தென் இந்திய ரஸாயன சாலை

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்.**

REGD. NO. M. 4392

License No. 18
Licensed to post without prepayment